**சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!**

# சோபனா சமர்த்

சோபனா பிரதி தினமும் கையாளும் ஒரு அழகிய வழக்கம் இதுதான். காலையிலும் மாலையிலும் அவர் தன் சருமத்தில் லக்ஸ் டாய்லட சோப்பின் நுரையைத் தடவி, பிறகு சுத்த ஜலத்தில் அலம்புகிறார். "என் சருமத்தை அழகாகவும், பளிச்சென்றும், தூய்மையாகவும், வைத்துக்கொள்ள நான் தவறாமல் செய்யும் முறை இதுதான்" என்று அவர் சொல்லுகிறார். இன்னும் அநேக சினிமா நட்சத்திரங்களும் அப்படியேதான் சொல்லுகிறார்கள்.




**லக்ஸ் டாய்லட் ஸோப்**

LEVER BROTHERS (INDIA) LIMITED


நீங்கள்
பலஹீனமாய்,
மெலிந்து,
களைப்புற்று,
குன்றிப்
போயிருந்தால்
உங்களுக்கு இந்த
டானிக்
ஆகாரம் தேவை
ஒன்பது உப்பு
சத்துக்களும்
அயோடினும்
உங்களை பலப்
படுத்துகிறது




USCO

எந்த உணவுப் பொருள்களை நீ அதிகம் விரும்புகிறாயோ!

# அவற்றினால் அதிக பலத்தைத் திரட்ட முயற்சிக்கவும்!












விருப்பத்துடன் நீங்கள் சாப்பிடும் உணவுப்பொருள்களை அதிக ஊக்கந் தரக்கூடியவைகளாகச் செய்யுங்கள். நமக்குப் பிரியப்பட்ட சில உணவுப் பொருள்கள் அதிக நன்மை அளிப்பதில்லை என்று உங்களுக்குத் தெரியுமா? அவைகள் பசியைத் தணிக்கின்றன. ஆனால் சிறிது ஊக்க மட்டும் அளிக்கின்றன—தேவையான அளவு ஊக்கத்தைக் கொடுப்பதில்லை. இது ஒரு நீடிக்கக்கூடிய யோசனைதான். ஆரோக்கியம், சந்தோஷம், திறமை—இவைகளெல்லாம் ஊக்கத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளன. சாப்பாடு நம் தேவைக்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுக்காவிட்டால் ஏற்படும் தீமைகள் பல. எல்லா உணவுப் பொருள்களும் சிறிதளவு ஊக்கத்தை அளிக்கின்றன. ஆனால் தினசரி சாப்பிடும் சில உணவுப்பதார்த்தங்கள் சொல்ப ஊக்கமளிக்கக் கூடியவை. இம்மாதிரியான சாப்பாட்டுக்கு ஊக்கத்தைக் கொடுக்கவேண்டுமானால் அதிக ஊக்கமளிக்கக் கூடிய பதார்த்தங்களைச் சேர்க்கவேண்டும். வைடமின் நிறைந்த டால்டாவினால் சமைப்பது அனுகூலத்தைக் கொடுக்கிறது. இயற்கையளிக்கும் ஊக்கத்தைக்கொடுக்கக்கூடிய சத்துப் பொருள்களை டால்டா கொடுக்கிறது. எல்லா உணவுப்பதார்த்தங்களையும் டால்டாவினால் சமையல் செய்வது நலம்.

ஒவ்வொருவருமெந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக் புக்" (ஆங்கிலத்தில் மட்டும் எழுதியுள்ளது) உணவுப்பொருள்களின் தராதரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப்பற்றியும்விவரித்திருக்கிறது. உங்களிடம்ஒருபிரதி இருக்க வேண்டியதவசியம். Dept. C133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்




வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.




மலர் 4 இதழ் 29 | 1945 பிப்ரவரி 25 | தாரண ௵ மாசி 14



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



நமது பாரத நாட்டுக்குப் பெருமை தேடித்தந்த பிரமுகர்களின் முன்னணியில் ஸி. கே. நாயுடுவும் நிற்கிறார். ஆங்கிலேயர்களுக்கே தனி உரிமையாயிருந்துவந்த கிரிக்கெட் விளையாட்டை ஆடத்தொடங்கி அதில் அகில உலகப் பிரசித்தி அடைந்தவர் ஸி. கே. நாயுடு. இந்தியாவில் இன்று கிரிக்கெட் விளையாட்டில் எத்தனையோ பேருக்கு அபார ருசி ஏற்படவும், ஆயிரம் பதினாயிரம் என்று ஜனங்கள் அந்த விளையாட்டைப் பார்த்து ரஸிக்கவும் காரணமாயிருப்பவர் ஸி. கே. நாயுடு.

ஸி. கே. நாயுடு விளையாட வந்துவிட்டால் ஜனங்களுக்கு ஒரே உற்சாகம். 'ஸிக்ஸர்! ஸிக்ஸர்!' என்று கூச்சலிடுகிறார்கள். நாயுடுவும் தமது அற்புத சாமர்த்தியத்தைக் காண்பித்து, ஜனங்களை ஆனந்தத்தில் ஆழ்த்துகிறார்.

சென்ற வாரத்தில் ஹோல்கார் கோஷ்டிக்கும் சென்னைக் கோஷ்டிக்கும் சென்னையில் நடந்த கிரிக்கெட் பந்தயத்தில் ஸி. கே. நாயுடு ஹோல்கார் கோஷ்டிக்குத் தலைமை வகித்து 53 ரன்கள் எடுத்துச் சென்னைக் கிரிக்கெட் அபிமானிகளைப் பரவசத்தில் ஆழ்த்தினார்.

ஸி.கே. நாயுடுவுக்கு இப்பொழுது ஐம்பது வயது ஆகிறது. அவரது 50-வது பிறந்த நாளைக் கொண்டாடுவதற்காக பம்பாயில் நாளது பிப்ரவரி 26-ந் தேதியிலிருந்து ஒரு பெரிய கிரிக்கெட் விழாவும் நடக்க இருக்கிறது. இந்த கிரிக்கெட் விழாவில் வசூலாகும் தொகையின் பகுதியை ஸி. கே. நாயுடுவுக்குக் கொடுத்து அவரைக் கௌரவிக்கப் போகிறார்களென்பதையும் அறிந்து பெருமகிழ்ச்சியடைகிறோம்.









# கல்கி

மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 29


# என்ன சேதி?

## இக்காலத் தமிழர்கள்

"பாரதியார் காலத்துத் தமிழர்கள் வேறு; இந்தக் காலத்துத் தமிழர்கள் வேறு. பாரதியார் காலத்துத் தமிழ் மக்கள் ஆங்கில பாஷை மோகத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அவர்கள் வள்ளுவரையும், கம்பரையும் போற்றவில்லை. எனவே பாரதியாரையும் பாராட்டி ஆதரிக்கவில்லை. இந்தக் காலத்துத் தமிழ் மக்களாகிய நாம் தமிழன்பு கொண்டவர்கள். கம்பரையும் வள்ளுவரையும் நாம் போற்றுகிறோம். காலஞ் சென்ற பாரதியாருக்கு ஞாபகச் சின்னம் அமைப்போம்: இந்தக் காலத்துக் கவிகளையும் ஆசிரியர்களையும் பாராட்டி ஆதரிப்போம்." — இவ்வாறு சில தினங்களுக்கு முன்பு நாம் எழுதியிருந்தோம். இதன் உண்மையைப் பரிசோதித்துப் பார்ப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டிருக்கிறது.

## நாமக்கல் கவிஞர் நிதி

தேசிய கவி, அதிலும் காந்நீய கவியான ஸ்ரீ நாமக்கல் இராமலிங்கம் பிள்ளைக்காக நிதி வசூல் செய்து அளிக்கும் யோசனை ஒன்று இருந்து வருவதாகவும் சில நாளைக்கு முன்பு குறிப்பிட்டிருந்தோம். அந்த யோசனை இப்போது உருவாகியிருக்கிறது. கவிஞரின் நண்பர்களும் அபிமானிகளும் சிலர் சேர்ந்து பத்திரிகைகளில் மேற்படி நிதிக்காக ஒரு விண்ணப்பம் விடுத்திருக்கிறார்கள். புதிய தமிழ் வருஷம் பிறந்ததும் தமிழ் மக்கள் பெருமைப்படக் கூடிய ஒரு நல்ல காரியத்தைச் செய்வதென்று அவர்களுடைய உத்தேசம். அந்த உத்தேசத்தை நிறைவேற்ற வேண்டியது தமிழ் மக்களின் கடமை. சிறந்த தேச பக்தரும், ஒழுக்கத்தில் உயர்ந்தவரும், உத்தமத் தியாகியுமான நாமக்கல் கவிஞர் தமிழ் மக்களால் ஆதரிக்கப்படுவதற்கு எல்லா விதங்களிலும் தகுதியுடையவர். கவிஞருடைய நண்பர்களும் அபிமானிகளும் செய்யும் காரியமாகவே இது ஆரம்பிக்கப் பட்டிருக்கிறதாயினும், தமிழன்பர்கள் அனைவரும் இம் முயற்சியில் கலந்து கொள்வதற்கு யாதொரு ஆட்சேபமுமில்லை. நன்கொடை அனுப்ப விரும்பும் அன்பர்கள் ஸ்ரீ வை. கோவிந்தன், நிர்வாக ஆசிரியர், "சக்தி", ராயப்பேட்டை, சென்னை என்ற விலாசத்துக்கு அனுப்பவேண்டும்.

"கவிஞர்களும் ஆசிரியர்களும் காலஞ் சென்ற பிறகுதான் அவர்களைத் தமிழர்கள் போற்றுவார்கள்; உயிரோடிருக்கும்போது பட்டினி போடுவார்கள்!" என்ற அவதூறுக்கு இனிமேல் இடமில்லாமல் தமிழ் மக்கள் செய்து விடுவார்கள் என்று நம்புகிறோம்.

## இன்னும் இரு நிதிகள்

தேசத்திற்காகத் தியாகம் செய்து சிறை புகுந்த தொண்டர்கள் பலர் இன்னமும் சிறைச்சாலைகளில் வாடி வதங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய குடும்பங்களைப் பட்டினியால் கஷ்டப்படும்படி விட்டால், அதைவிட நன்றிகெட்ட செய்கை வேறொன்றும் இல்லை. ஆதலின், அரசியல் கைதிகளின் குடும்ப உதவிக்காக வசூலிக்கப்பட்டு வரும் நிதிக்கு அவசியம் தமிழ் நாட்டார் உதவி செய்ய வேண்டும்.

காலஞ் சென்ற ஸ்ரீ சத்திய மூர்த்தி அவர்களின் ஞாபகார்த்த நிதியொன்று

# நிகழ்ச்சிச் சித்திரம்

"சட்டசபைக் கட்டடத்தில் புலாபாய்தேசாயும் நவாப்ஸாதா லியாகத் அலிகானும் சந்தித்துப்பேசும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் வைஸ்ராய் நிர்வாகசபை மெம்பர்கள் உடம்பு பயத்தால் உதறுகிறது" என்று சமீபத்தில் ஒரு ஐரோப்பியர் கூறியிருக்கிறார்.



"ஒருபக்கம் அடக்குமுறைக் கொள்கையைக் கையாண்டுகொண்டு மற்றொருபக்கம் ராஜிப்பேச்சு வார்த்தை நடத்துவது" பற்றி மகாத்மா காந்தி ஆச்சரியப் படுகிறார்!

ஆரம்பமாகி இன்னும் பூர்த்தி பெறாமல் இருக்கிறது. நாட்டுக்காக அல்லும் பகலும் அனவரதமும் பாடு பட்டு உயிரையே விட்ட உத்தம தேசத் தலைவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் அமைக்காவிட்டால் அது தமிழ் நாட்டுக்கே அவமானமாயிருக்கும். ஆகையால், ஸ்ரீ சத்தியமூர்த்தி நிதிக்கும் தாராளமாகப் பண உதவி செய்யும்படி நேயர்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

இந்த மாதிரி இன்னும் பல முக்கியமான நல்ல காரியங்கள் பாக்கியிருப்பதை மூன் விட்டே, எட்டயபுரம் பாரதி ஞாபகார்த்த நிதியைப் பலாத்காரமாக பிப்ரவரி 10-ம் தேதியுடன் நிறுத்தினோமென்பதை ஞாபகப் படுத்துகிறோம்.

## நண்பரின் உதவி

சமீபத்தில் சிறையிலிருந்து விடுதலையடைந்த நமது நண்பர் ஜனுப் உபயதுல்லா, வெளியூரில் பொதுக் கூட்டங்கள் நடத்தி அவருக்கு வழக்கமான முறையில் வீராவேசமான பிரசங்கங்கள் செய்து வருவதுடன் மேலே குறிப்பிட்ட இரண்டு நிதிகளுக்கும் ஆங்காங்கு பணம் வசூலித்து வருவதாக அறிகிறோம். இதன் பொருட்டு நண்பர் உபயதுல்லாவைப் பெரிதும் பாராட்டுகிறோம். இவ்வளவுடன் நில்லாமல், ஜனுப் உபயதுல்லா நமது பத்திரிகைக்கும் ஒரு சிறந்த உதவி செய்து வருவதாகத் தெரிகிறது. "கல்கி" பத்திரிகையில் வரும் விஷயங்களை அலசி ஆராய்ந்து சக்கைப் போடு போடுவதாக அறிகிறோம். "கல்கி" இதழ்களுக்குத் தற்போது தமிழ்நாட்டில் இருக்கும் கிராக்கி அனைவரும் அறிந்ததே. "கல்கி" விற்பனையிலும் 'கறுப்பு மார்க்கெட்' ஏற்பட்டு, சில இடங்களில் ஐந்தணா ஆறணாவுக்கு விற்கப்படுவதாகச் செய்திகள் வருகின்றன. அநேக இடங்களில், வேறு ஒரு பத்திரிகையும் சேர்த்து வாங்கினால்தான் "கல்கி" தருவோம் என்று கடைக்காரர்கள் சொல்கிறார்களாம்! இத்தகைய சட்ட விரோதமான காரியங்களைப் பற்றி என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் என்பதைப் பற்றி நாம் யோசித்துக் கொண்டிருக்கையில் நண்பர் உபயதுல்லா நமக்கு ஓர் அரிய உதவி செய்து வருகிறார். அதாவது, "கல்கி"யிலுள்ள விஷயங்களைக் "கல்கி" இதழ்கள் கிடைக்காதவர்களுக்கும் ஓரளவு தெரியும்படியாக வெளிப்படுத்தி வருகிறார்! மிக்க வந்தனம்.

# நாமக்கல் கவிஞர் நிதி

ஸ்ரீ சுப்பிரமண்ய பாரதிக்கு அடுத்தபடி, சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகத் தமிழ் மக்களின் ஆர்வங்களை அழகாகப் பாடித் தேச பக்தியை வளர்த்து வரும் கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளையவர்களுக்கு ஒரு நிதி வசூலித்து, வரப்போகும் பார்த்திப வருஷ ஆரம்பத்தில் (ஏப்ரல் 15ஷ ஞாயிற்றுக்கிழமை) அளிப்பதென்று முன் வந்திருக்கிறோம். அவர்கள் தேசத்துக்கும் தமிழுக்கும் செய்து வரும் தொண்டுக்கு இந்த நிதி ஓரளவு நம்முடைய நன்றியைக் காட்டும்.

கவிஞர் ராமலிங்கம் பிள்ளையவர்களுடைய பாடல்களைப் பாராட்டும் தமிழன்பர்கள் அனைவரும் இந்த நிதிக்கு நன்கொடைகள் தந்து உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடை அனுப்பும் நண்பர்கள் மேற்படி நிதிக்காக என்று குறிப்பிட்டு ஸ்ரீ வை. கோவிந்தன், "சக்தி" நிர்வாக ஆசிரியர், ராயப்பேட்டை, சென்னை என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்.

டி. எஸ். சொக்கலிங்கம்.
வ. ரா.
வை. கோவிந்தன்.
ரா. கிருஷ்ணமூர்த்தி.
நா. அண்ணாமலை.
எஸ். தேசிக விநாயகம் பிள்ளை.
டி. கே. சிதம்பரநாத முதலியார்.
ச. ராஜகோபாலாச்சாரியார்.

மேற்படி நிதிக்கு இதுவரை கிடைத்திருக்கும் நன்கொடைகள் :—

| | | | |
|---|---|---|---|
| மதுரை ஸ்ரீ மீனாட்சி | 1000 | 0 | 0 |
| மதுரை ஸ்ரீமதி லெட்சுமி காந்தம் அம்மாள் வகையரா | 500 | 0 | 0 |
| பயனியர் சாயத் தொழிற் சாலை, சென்னை | 500 | 0 | 0 |
| "கல்கி" நிர்வாகிகள் | 500 | 0 | 0 |
| ஸ்ரீ டி. இ. வரதாச்சாரி வகையரா, சென்னை | 250 | 0 | 0 |
| ஸ்ரீ ராஜா குருநாதன், இளம் பள்ளி ஜமீந்தார் | 200 | 0 | 0 |
| ஸ்ரீ நா. அண்ணாமலை | 151 | 0 | 0 |
| ஸ்ரீ வை. கோவிந்தன் | 151 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எஸ். அவினாசி லிங்கம் செட்டியார் எம்.எல்.ஏ. | 101 | 0 | 0 |
| ஸ்ரீ கரு. லெட்சுமணன் | 101 | 0 | 0 |
| ஸ்ரீ வி. என். குமாரசாமி | 101 | 0 | 0 |
| டாக்டர் ப. சுப்பராயன் | 101 | 0 | 0 |

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: மா. அருணாசலம், பொன்மலை, திருச்சி.*

# காந்தியின் கண்ணீர்

காந்தி மகான் கண்ணீர் விடுகிறார்.

துயரக் கண்ணீர் விடுகிறார்.

கோபக் கண்ணீர் விடுகிறார்.

கண்ணீரால் நனைந்த சொற்களைக் கொண்டு அறிக்கை விடுகிறார்.

'ஏழை அழுத கண்ணீர் கூரிய வாள் ஒக்கும்' என்பது பழமொழி.

'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்பது இன்னொரு பழமொழி.

மகாத்மா காந்தி ஏழை; சாது.

அவருடைய கண்ணீர்த் துளி தரையில் விழுமானால் அதிலிருந்து மூளும் தீ ஆயிரம் ஏகாதிபத்தியங்களைச் சுட்டெரிப்பதற்குப் போதுமானது.

சாது மகாத்மா கோபங் கொண்டு சாபங் கொடுப்பாரானால் பதினாயிரம் சர்வாதிகாரிகளும் இராஜ தந்திரிகளும் பஸ்மீகரமாகப் போய் விடுவார்கள்.

இதை, தற்சமயம் இந்தியா தேசத்தில் யதேச்சாதிகார ஆட்சி செலுத்தி வரும் அதிகார வர்க்கத்துக்கு நாம் ஞாபகப் படுத்துகிறோம்.

வெற்றிக் கர்வத்தினால் மதோன்மத்தம் கொண்டிருக்கும் சர்ச்சிலுக்கும் அவரை யொத்த இராஜ தந்திரிகளுக்கும் நினைவூட்டுகிறோம்.

இவர்களைக் காட்டிலும் அபாரமான, பிரமாதமான வெற்றிகளை யடைந்தவர்கள் எல்லாம் முற்காலத்திலே இருந்திருக்கிறார்கள் என்பதையும், அவர்களும் அவர்கள் ஸ்தாபித்த இராஜ்யங்களும் இருந்த இடந் தெரியாமல் மண்ணோடு மண்ணாய்ப் போய் விட்டன என்பதையும் ஞாபக மூட்டுகிறோம்.

* * *

உடல் நலங் குன்றி, பலவீனமடைந்து, தளர்ச்சியும் சோர்வும் உற்று, 'வேலை செய்யா விரதம்' எடுத்துக் கொண்டு வார்தா ஆசிரமத்தில் கடின தவம் செய்து கொண்டிருக்கும் மகாத்மா காந்தி பிப்ரவரி 17௳ யன்று ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

அந்த அறிக்கையைப் படிக்கும்போது அதில் இருக்கும் ஒவ்வொரு வார்த்தையும் கண்ணீர் கலந்த வார்த்தை என்பதை அறிகிறோம். வேதனை மிகுந்த உள்ளத்திலிருந்து பீறிக்கொண்டு வந்த வார்த்தை என்பதை அறிகிறோம். பொறுமையில் பூமாதேவியை யொத்த சாந்த மூர்த்திக்குக் கூட அவரை அறியாமலே கோபமும் ஆத்திரமும் வந்திருக்கின்றன என்பதை அறிகிறோம்.

அரசியல் நடவடிக்கைகளிலிருந்து ஓய்வு பெற்றிருக்க விரும்பிய மகாத்மாவின் கவனத்தைப் பலவந்தமாக இழுத்து இத்தகைய அறிக்கையை விடும்படி செய்த பெருமை பீஹார் அதிகார வர்க்கத்துக்கு உரியதாகிறது. பீஹார் அதிகார வர்க்கத்தோடு ஐக்ய மாகாண அதிகார வர்க்கமும் ஒரிஸா அதிகார வர்க்கமும் அந்தப் பெருமையில் ஒவ்வொரு கூறு பங்கை அடைகின்றன.

பீஹாரில் சில பிரபல காங்கிரஸ் தலைவர்கள்மீது பாதுகாப்புச் சட்டம் பிரயோகிக்கப் பட்டதும், ஐக்ய மாகாணத்தில் பாபு புருஷோத்தமதாஸ் தாண்டனும், ஒரிஸாவில் ஸ்ரீ கோபபந்து சௌத்ரியும் கைது செய்யப் பட்டதும், மகாத்மா மேற்கண்ட அறிக்கையை வெளியிடுவதற்குக் காரணமான சம்பவங்கள். (அறிக்கை வெளியானதற்குப் பிறகு தாண்டன் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்.)

மேற்கூறிய இரு சம்பவங்களும் மகாத்மாவுக்கு அர்த்தமாக வில்லை; ஆச்சரியத்தை உண்டு பண்ணி யிருக்கின்றன. ஆச்சரியத்தோடு, அடங்காத துயரத்தையும் ஆத்திரத்தையும் உண்டு பண்ணி யிருக்கின்றன.

"இது என்ன வேடிக்கை? ஒரு பக்கத்தில் அரசியல் சமரசத்தை உண்டு பண்ணுவதற்காக புலாபாயுடன் வைஸ்ராய் பேச்சு வார்த்தை நடத்துகிறார்; இன்னொரு பக்கத்தில் இந்த மாதிரி அக்கிரமங்கள் நடக்கின்றனவே!" என்று மகாத்மா அதிசயிக்கிறார்.

இதிலிருந்து மகாத்மா அரசியல் சமரசத்தையே விரும்புகிறார் என்பதும், போராட்டம் எதையும் தற்சமயம் அவர் விரும்பவில்லை என்பதும் தெள்ளத் தெளிவாகிறது.

இதை மகாத்மா இன்னும் ஸ்பஷ்டமாகப் பின் வருமாறு சொல்கிறார்:—

"பொதுஜனச் சட்டமறுப்பு ஆரம்பிக்கும் அதிகாரம் எனக்குத்தான் உண்டு. அந்த அதிகாரத்தை உபயோ

பிக்கும் உத்தேசம் எனக்குக் கிடையாது. மற்றவர்களால் பொதுஜனச் சட்டமறுப்பு ஆரம்பிக்க முடியாது. ஆரம்பித்தாலும் பொது ஜனங்கள் அசைய மாட்டார்கள்" என்று காந்தி மகான் சொல்லி, பின் எதற்காக அதிகார வர்க்கம் காங்கிரஸ் வாதிகளின் மீது அடக்குமுறைப் போரை ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்கிறார்.

தற்சமயம் காங்கிரஸ் தொண்டர்களுக்கெல்லாம் தாம் சொல்லியிருக்கும் திட்டம் நிர்மாணத் திட்டந்தான் என்பதை வற்புறுத்தி விட்டு, "இந்தியாவின் சுதந்திரத்தைப் பற்றிப் பேசுவதுகூடப் பிசகா? 'தீவிர' அரசியல் திட்டம் என்று வாயால் சொல்வதும் குற்றமா?" என்று ஆத்திரத்துடன் வினவுகிறார்.

இதெல்லாம் மகாத்மாவுக்குப் பழைய 1942-ம் வருஷத்துச் சம்பவங்களை நினைவூட்டியிருக்கின்றன. "அப்போது அநாவசியமாகவும் அவசரப்பட்டும் பொது ஜனங்களுடன் போராட்டத்தைத் தொடங்காமல் காங்கிரஸின் கோரிக்கைக்கு மட்டும் அதிகாரிகள் இணங்கியிருந்தால், இதற்குள் யுத்தம் முடிந்திருக்குமே; உலகத்தில் எல்லாரும் சந்தோஷமாய் வாழத் தொடங்கியிருக்கலாமே" என்று காந்தி மகான் பச்சாத்தாபப்படுகிறார்.

கடைசியாக, மகாத்மா காந்தி ஓர் எச்சரிக்கை செய்து முடிக்கிறார்:— "இந்தியாவில் இப்படியே காரியங்கள் நடந்து கொண்டிருக்குமானால், நேசக் கட்சியாரின் வெற்றி பெயரளவிலே தான் வெற்றியாயிருக்கும். அந்த வெற்றியிலிருந்து மற்றொரு பெரும் பூதம் கிளம்பி எதிரில் தோன்றியதையெல்லாம் விழுங்கி விடும்!"

மகாத்மாவின் எச்சரிக்கையானது ஏறக்குறைய சாபம் போலவே தொனிக்கிறது. இதிலிருந்து, அவருடைய தூய உள்ளம் எவ்வளவு தூரம் புண்பட்டு வேதனை அடைந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

* * *

"இந்தக் கையினைகாத காந்தியின் கோபமும் சாபமும் நம்மை என்ன பண்ணிவிடப் போகின்றன? இவருடன் சமரசம் செய்து கொள்வதினால்தான் நமக்கு என்ன சாதகம் ஏற்பட்டுவிடப் போகிறது?" என்று இந்திய யதேச்சாதிகாரிகள் எண்ணலாம். அவர்களுடைய மாபெரும் குருநாதராகிய வின்ஸ்டன் சர்ச்சிலும் அவ்வாறே கருதலாம். (அதாவது இந்தியா என்பதாக ஒரு தேசம் இருக்கிறது என்பதை அந்த மகா மகா ஆத்மாவுக்கு யாராவது ஞாபகப்படுத்தும் பட்சத்தில்!)

ஆனால், இந்த மாதிரி வெகு காலம் அவர்கள் அலட்சியம் செய்து கொண்டிருப்பது ஒருநாளும் இயலாத காரியம்.

நாற்பது கோடி ஜனங்களையும் அவர்களுடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமான தலைவர்களையும் அசட்டை செய்து விட்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் வெகுகாலம் நீடித்திருக்க முடியாது.

வின்ஸ்டன் சர்ச்சிலைத் தலைவராகக் கொண்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் எத்தனையோ பெரிய மகத்தான சாம்ராஜ்யங்கள் உலகில் இருந்திருக்கின்றன.

சென்ற வாரத்தில் சர்ச்சில் கிரிமியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போகும் வழியில் கிரீஸில் இறங்கினார். "கிரேக்கர்களே, ஒன்று படுங்கள்; ஒற்றுமை அடையுங்கள்; எல்லாரும் கிரீஸுக்காக வாழுங்கள்; கிரீஸுக்காக எல்லாரும் வாழுங்கள்!" என்று உபதேசம் செய்து விட்டுப் போனார்.

இதே கிரீஸ் தேசம், இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்னால், சர்ச்சிலின் மூதாதைகள் மாக் கிளைகளையே மானிடைகளாகக் கொண்டு வாழ்ந்த காலத்தில், மகத்தான ஒரு உலக சாம்ராஜ்யத்திற்கு மகோந்நத தலைமை ஸ்தானமாக இருந்தது.

அந்த கிரீஸ் தேசந்தான் இப்போது சர்ச்சிலின் உபதேசத்துக்கும் உலகத்தின் பரிதாபத்துக்கும் உரிய சின்னஞ்சிறு தேசமாக இருக்கிறது.

கிரேக்க சாம்ராஜ்யம் அழிந்த பிறகு சில நூற்றாண்டு காலம் ரோம சாம்ராஜ்யம் தலை நிமிர்ந்து நின்றது. தற்சமயம் அதே ரோமாபுரி வாசிகள் அமெரிக்காவிலிருந்து பிச்சைக் கப்பல் எப்போது வருமென்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இன்னும் பாக்தாத் நகரைத் தலைநகரமாகக் கொண்ட காலிப் சக்கரவர்த்திகள் வெகு காலம் உலக சாம்ராஜ்யத்தை ஆண்டு வந்தார்கள்.

செங்கிஸ்கானும், தாமர்லேனும், நெப்போலியனும் அவரவர்களுடைய காலத்தில் உலகத்தையே வளைத்துக் கட்டியாளப் பார்த்தார்கள்.

அவர்களெல்லாம் போய்ச் சேர்ந்த இடத்தில் சர்ச்சிலுக்கும் ஒரு இடம் காத்துக் கொண்டுதான் இருக்கிறது!

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இந்த யுத்தத்தின் போதே உலகில் மூன்றாவது ஸ்தானத்தை அடைந்திருக்கிறது. யுத்தத்துக்குப் பிறகு என்ன ஆகும் என்று சொல்ல முடியாது.

இதையெல்லாம் இந்திய அதிகாரவர்க்கமும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளும் யோசித்துப் பார்த்தால் நாற்பது கோடி இந்திய மக்களை அலட்சியம் செய்வது எவ்வளவு மதியீனம் என்பதை அறிவார்கள்.

* * *

இந்திய அரசியல் பிரச்னையைத் தீர்த்து வைக்காமல் காலம் தள்ளுவதற்குத் தற்சமயம் ஏதேனும் நியாயமான காரணம் இருக்கிறதா? காங்கிரஸ் தலைவர்களை இன்னமும் சிறையில் வைத்திருப்பதற்கு எந்த விதமான நியாயமாவது சொல்ல முடியுமா?

மூன்று வருஷத்திற்கு முந்திய அகில இந்தியக் கமிட்டியின் தீர்மானத்தில் 'பொதுஜனப் போராட்டம்' என்ற சொற்றொடர் இருப்பதற்காகக் காங்கிரஸ் தலைவர்களை இன்னும் சிறையில் வைத்திருக்க வேண்டுமா? வெளியில் நிர்மாணத் திட்டத்தை நடத்தி வைப்பது பற்றி ஆலோசிக்கக் கூடும் காங்கிரஸ் வாதிகளின் மீது பாதுகாப்புச் சட்டத்தைப் பிரயோகிக்க வேண்டுமா?

பொதுஜனச் சட்டமறுப்புத் தொடங்கும் உத்தேசம் இல்லையென்றும், அரசியல் சமரசத்தையே விரும்புவதாகவும் மகாத்மா காந்தி இவ்வளவு தெளிவாகக் கூறிய பிறகு இதெல்லாம் அவசியமா?

சமீபத்தில் கிரீஸ் தேசத்தில் நடந்ததை மறுபடியும் உதாரணத்துக்குக் கவனிப்போம்.

ஒரு மாதத்துக்கு முன்னால்தான் கிரேக்க பொது உடைமைக்காரர்களைப் பற்றி அவர்கள் 'கொலைகாரர்கள்' என்றும் அவர்கள் கையில் ரத்தம் தோய்ந்திருக்கிறதென்றும் சர்ச்சிலும் அவருடைய கோஷ்டியாரும் பேசினார்கள். அவர்கள்மீது பயங்கரமான குற்றங்களையெல்லாம் சுமத்தினார்கள். இப்பேர்ப்பட்ட, 'கையில் ரத்தம் தோய்ந்த கொலைகாரக் கும்ப'லோடு, சர்ச்சிலின் ஆதரவு பெற்ற கிரேக்க சர்க்கார் இப்போது சமரசம் செய்து கொண்டிருக்கிறார்கள்! அந்தக் கும்பலுக்குக் கிரேக்க சர்க்காரில் சம ஸ்தானம் கிடைத்திருக்கிறது. சர்ச்சிலுக்கு இது விசித்திரமாகவோ தவறாகவோ தோன்றவில்லை. இந்த சமரசம் ஏற்பட்ட பிறகுதான் சர்ச்சில் கிரீஸுக்குச் சென்று மேற்கண்டவாறு ஒற்றுமைப் பல்லவி பாடி மனமார்ந்த வாழ்த்துக் கூறிவிட்டு வந்திருக்கிறார்.

கிரேக்க கம்யூனிஸ்டுகள் செய்ததாகச் சொல்லப்படும் காரியங்களில் பதினாயிரத்தில் ஒன்றாவது இந்தியாவில் காங்கிரஸ் வாதிகள் செய்ததுண்டா? கிரேக்க கம்யூனிஸ்டுகளைப் போல் இந்தியக் காங்கிரஸ் வாதிகள் மிஷின் பிரங்கி வைத்துக் கொண்டு பிரிட்டிஷ் சோல்ஜர்கள் மேல் சுட்டதுண்டா? பிரிட்டிஷ் சோல்ஜர்களைச் சிறை பிடித்துச் சென்று பாதுகாப்பில் வைத்துக்கொண்டதுண்டா?

இந்த மாதிரி காரியங்களையெல்லாம் காந்தி மகானும் காங்கிரஸ் தலைவர்களும் கனவிலும் கூடக் கருதியது கிடையாது.

அப்படியிருக்க, 'கொலைகாரக் கம்யூனிஸ்டுகள்' அடங்கிய கிரேக்க கவர்ன்மெண்டோடு ஒத்துழைத்து உறவு கொண்டாடும் சர்ச்சில், காந்தி மகானோடும் காங்கிரஸ் வாதிகளோடும் சமரஸம் செய்து கொள்வதற்கு ஏன் தயங்க வேண்டும்?

இந்த முரண்பாட்டுக்கு. "கிரேக்கர்கள் வெள்ளை நிறத்தவர்கள்; இந்தியர்களின் நிறம் கருப்பு" என்பதைத் தவிர வேறு என்ன காரணம் சொல்ல முடியும்?

இது ரொம்பப் பொல்லாத காரணம்; இந்தக் காரணத்திலிருந்துதான் மகாத்மா காந்தி குறிப்பிடும் பெரும் பூகம்பம் தோன்றக்கூடும் என்று நாம் கருதுகிறோம்.

புத்திசாலிகளும், தீர்க்க திருஷ்டி உள்ளவர்களும் இத்தகைய காரணத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது.

உலக நன்மையை முன்னிட்டு, பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் புத்திசாலிகளாகவும் தீர்க்க திருஷ்டி உள்ளவர்களாகவும் ஆகவேண்டுமென்று விரும்புகிறோம்.

## பாரதியார் ஞாபகார்த்த நிதி

மேற்படி நிதிக்கு பிப்ரவரி 10௳ வரையில் நன்கொடையளித்தவர்களின் ஜாபிதா தொடர்ச்சி அடுத்த இதழில் வெளியாகும்.

# வான சஞ்சாரம்

இசைத்தேன்

ரேடியோவில் அடிக்கடி கேட்கும் வாத்யக் கச்சேரிகளில், சில நன்கு அநுபவிக்கக் கூடியதாகவே யிருக்கின்றன. அத்தகையவைகளில் ஒன்று 13-ல் திருச்சியிலிருந்து கேட்ட பூவனூர் எஸ். சுந்தரேச முதலியாரின் வேணு கானம். சுநாதத்துடனும் நல்ல வழியுடனும், மாயாமாளவ கௌளை, கல்யாணி, கீரவாணி ராகங்களையும் உருப்படிகளையும் வாசித்தார். பிலஹரி உருப்படியில் அமைத்த ஸ்வரம் குறிப்பிடத்தக்கது.

அன்றிரவு சென்னையில் வேதாசலம் செட்டியார் வழக்கம்போல் தன் கைச்சரக்கை யெல்லாம் முடுக்காய் வழங்கினார். தோடி சிறப்புற்றிருந்தது. ஆனால் அன்று தன் கச்சேரியின் பல பாகங்களை ரொம்ப அடக்கிப் பாடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தது போல் தோன்றியது. இயற்கையாகவே எளிதில் விலையாகும் அவரது சரக்குக்கு அதுபோன்ற நகாசு வேலைகள் அவசியமோ என்பது சந்தேகம்.

14-ல் சென்னையில் பாடிய டி. எஸ். கோமதிக்கு, கனிப்பும் நல்ல உதவுபடியும் கொண்ட குரல். அத்துடன் அவர் தைரியசாலி என்பது ராக ஆலாபனைகளிலிருந்து தெரிந்தது. பிர்க்காவுடன், நல்ல வளைவு, குழைவு கார்வைகள் சேர்ந்து, ஆபோகி, பிலஹரி, தன்யாசி, தோடியென்று ராகங்களை ஒரு கை பார்த்தார். தோடியில் மேல் பஞ்சமம் வரை அநாயாசமாய்-உருப்பிய சஞ்சாரங்கள் பாவப் பொழிவா யிருந்தன. ஆபோகி இறுதியில் கண்ட நிரவல் ஜோர்.

15-ல் கச்சேரிகளில், திருச்சியிலிருந்து கேட்ட கே. பி. சிவானந்தத்தின் வீணை வாத்யத்தைக் குறிப்பிடாமலிருக்க முடியாது. அவரிடம், ஞானபாவம், அரிய சாதகம், கற்பனை மூன்றும் சேர்ந்து காணப்பட்டன. ஹரிகாம்போதி, கல்யாணி இரண்டிற்கும் ஆலாபனையோடு தானமும் வாசித்தார். பைரவி எல்லாவற்றையும் தூக்கியடித்தது. படிப்படியான கற்பனைக்கோர்வை யழகு சஞ்சாரங்களோடும், கமகப் பொழிவுடனும், ராகஸ்வரூபங்கள் தெளிவாயிருந்தன. மீட்டு சத்தம் மாத்திரம் அதிகமாய்க் கேட்டது. நுட்பமான கமகப் பிடிகளின் அருமை ரசிகர்கள் காதில் விழாது போய்விடுமோ என்று பலமாய் அடித்து மீட்டினார் போலும்!

சரீர சம்பத்தும், நல்ல ஞானமும், அழகு பாணியும் கொண்ட ஒருவர், பாட உட்கார்ந்தவுடன் விபரீதமாய்த் தொண்டை 'மக்கர்' பண்ண ஆரம்பித்தால், அவர் என்ன பாடுபடமாட்டார்? பாவம்! 16-ல் திருச்சியில், திருச்சூர் எம். லக்ஷ்மிக்கு அவ்வாறு சற்று தொல்லை ஏற்பட்டது. இருந்தாலும் விட்டாரா என்ன? தொண்டையுடன் கொஞ்சம் சண்டைபோட்டு, எப்படியோ ஜெயித்து, வலஜி, காம்போதி, சாருகேசி ராகங்களைத் தைரியமாய் விளாசி விட்டார். 'நடமாடித் திரிந்த' உருப்படியில் கண்ட நிரவல் முன் குறைகள் எல்லாவற்றையும் மறக்கடித்தது.

அன்று அதே நிலையத்தின், குளிக்கரை எஸ். பிச்சையப்ப பிள்ளை நாதஸ்வரத்தில் முதல் பாகத்தில் வாசித்த ஸிம்மேந்திர மத்யம ராக ஆலாபனையும், பல்லவி ராகமாலிகையும், காதுக் கின்பமாயிருந்தன. பிறகு, ரேடியோ வாத்ய கோஷ்டியுடன் சேர்ந்து வாசித்த இரண்டாம் பாகத்தை, அவ்வளவாகச் சொல்லுவதற்கில்லை. இந்த ரேடியோப் புதுமை, இயற்கை யழகுக்குச் சற்று விரோதமாகவே தென்பட்டது. கர்னாடக சங்கீதத்தின் பெரும் பான்மை அழகு அதன் ராகங்களில் தானிருக்கிறது. அதிலும், நாதஸ்வரத்தில் கேட்க வேண்டியவை, முக்கியமாய் ராகங்களே. பல வாத்யகோஷ்டியில் ராகங்களுக்கு இடமில்லை. நாதஸ்வரத்தின் தனி ஒலியின் பத்துக்கும் நாஸூக்கான கமகப் பிடிகளுக்கும் பலவாத்ய கோஷ்டியின் சத்தத்திற்கும் பொருத்தமேது? வாத்யகோஷ்டியில் உருப்படிகள் ஸ்தூலமாய்த்தான் கேட்கும். இந்தப் புதுப் புரோகிராம் முழுவதும் அத்தகைய உருப்படிகளாகவே யிருந்தன. எனவே, நாதஸ்வரத்தின் தனிப்பெருமை வாத்ய கோஷ்டியின் ஆரவாரத்தில் அமுங்கிப் போனது ஆச்சரியமில்லை.

17-ல் சென்னையில் தண்டபாணி தேசிகர் செய்த முழுக்கச்சேரி வழக்கம்போல் பாவம் நிறைந்ததாயிருந்தது. ஆனால் அவர் புரோகிராமில் அதிக உருப்படிகளைப் போட்டுக் கொள்ளாது, எடுத்துக்கொண்ட, தர்பார், ஹரிகாம்போதி ராகங்களையும், அவைகளின் உருப்படிகளையும் வெகு விஸ்தாரமாய் வழங்கினார். 'உண்டென்று உறுதி கொள்' உருப்படியில் நிரவல் ஸ்வரங்களை அமோகமாய் வாரியளித்தார். ராகமாலிகை யில்லாது தேசிகரேது? அதில் அவரது பாவப்பொழிவின் தனிச்சிறப்புக் கண்டதென்பது சொல்லத் தேவையில்லை.

"ரஸிகர்களே! இக்காலத்தில் அநேகமாய் விவரமில்லாத ஓர் பிர்க்கா சங்கீதத்தையே கேட்கிறீர்களே! கேட்டுப்பாருங்கள் சற்று என் பிரத்யேக வழியை" என்று அறைகூவி யழைப்பதுபோல், 18-ல் சென்னையில் பத்தமடை சுந்தரமய்யர் ஒரு மணி நேரம் கச்சேரி செய்தார். சரீர சம்பத்தில்லாதது, பெருமித ஞானபாவத்தினாலும், பெரும்பான்மையும் புரிக்கை கமக சாதகத்தினாலும், கற்பனைப் பெருக்கினாலுமே பிரமிக்க வைக்கும் சங்கீதமாய் விளங்கியது. அன்று அவர் எடுத்துக் கொண்ட ஸ்ரீரஞ்சனி, கனராகம் போலவே அமோகமாய்ப் பெருகி வந்தது. வக்ர சஞ்சாரங்களைக் கூட இழைத்து நிழைத்துப் பிடித்து விளக்கியது பெருமையே. 'ஸோக லாக' உருப்படியில் விழுந்த சங்கதிகள், பாவக்களஞ்சியமா யிருந்தன. ஆரபி, கானடா ஆலாபனைகளும் சிறந்து விளங்கின. கட்டை சாரீரத்தை வளைத்தும் ஒடுக்கியும் கனநயம் கொடுத்து, இயற்கைச் செல்வக் குறைவை மறைத்து பாவத்தைப் பெருக்கும் இவர் சாமர்த்தியம் வியக்கத்தக்கதே!

# சென்னை - ஹோல்கார் கிரிக்கட் பந்தயம்

சென்ற வாரம் சென்னையில் ஹோல்கார் கோஷ்டிக்கும் — சென்னைக் கோஷ்டிக்கும் நடந்த கிரிக்கட் போட்டியில் ஹோல்கார் கோஷ்டி வெற்றி யடைந்தது. இந்த கிரிக்கட் பந்தயத்தைப் பார்க்க சேப்பாக்கம் மைதானத்தில் 20,000 பேர்களுக்கு மேல் கூடி யிருந்தார்கள். அ பந்தயத்தின்போது, 'கல்கி'க் கேமரா' பிரத்தியேகமாக எடுக்கப்பட்ட சில புகைப் படங்களை இங்கே காணலாம்.



ரூபாயைச் சுண்டிப் போட்டுச் சென்னைக் கோஷ்டித் தலைவரும் ஹோல்கார் கோஷ்டித் தலைவரும் 'பூவா, தலையா?' என்று பார்க்கிறார்கள். இதன் பலனாகச் சென்னைக் கோஷ்டிக்கு முதலில் விளையாடும் உரிமை கிடைத்தது.

★



ஹோல்கார் கோஷ்டி விளையாடச் செல்கிறார்கள். படத்தின் மத்தியில் இருப்பவர்தான் சுறுசுறுப்புக்குப் பெயர் போன ஸ்ரீ முஷ்டாக் அலி.



★

விளையாட்டு மைதானத்தின் ஒரு தூரக் காட்சி. தூரத்தில் தெரியும் மராமத்து இலாகாக் காரியாலயத்தின் கோபுரத்தையும் படத்தில் காணலாம்.

★



சென்னைக் கோஷ்டித் தலைவர் மத்தியில் இருக்கிறார். அவருக்கு இடது பறத்தில் வி. கே. நாயுடு வும் வலது புறத்தில் ஹோல்கார் கோஷ்டியில் விளையாடிய பிரபல ஆங்கில ஆட்டக்காரர் காப்டனும் இருக்கிறார்கள்.



விளையாட்டு மைதானத்தின் இன்னொரு தோற்றம். படத்தில் பந்தாடுகிறவர்தான் வி. கே. நாயுடு. பந்து, விக்லருக்குப் போகிறதா என்று எல்லாரும் பார்க்கிறார்கள்.







வேடிக்கை பார்க்க வந்திருந்த கூட்டத்தில் ஒரு பகுதி. குடை, தொப்பி, டிபன், ஊதல் சகிதம் மூன்று நாளும் கிரிக்கெட் ரசிகர்கள் வந்திருந்து பந்தயத்தைச் சம்பிரமமாக நடத்தி வைத்தார்கள்.



ஐம்பத்திரண்டு 'ரன் கள்' எடுத்து வி. கே. நாயுடு வெளியேறினார். ஜனக் கூட்டம் கர கோஷ ஆரவாரம் செய்து வி. கே. நாயுடுவின் ஆட்டத் தைப் பாராட்டியது.



★

சாமர்த்தியமாகப் பந்தை யெறிந்து நாயுடுவை வெளி யேற்றிய சென்னை ஆட்டக் காரர் ரங்காச்சாரி. மகம்மது நிஸ்ஸாருக்குப் பிறகு பந்தை வேகமாக எறிவதில் நிபுணர் என்று புகழ் பெற்றிருக்கிறார்.

★



ஆயிரக் கணக்கான ஜனங்கள் மட்டுமின்றி, ஏராளமான சைக்கிள் களும் விளையாட்டைப் பார்க்க வந்திருந்தன.

★

போட்டோ:
எக்கின்ஸ் ஆர். டங்கன்

# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 55

## சபை கலைந்தது

**வட** பெண்ணைக் கரையில் சளுக்கர் படைக்குள்ளே மகேந்திர சக்கரவர்த்தி பிரவேசித்து புலிகேசியைப் பார்த்தார் * என்னும் செய்தியினுல் சபாமண்டபத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி ஒருவாறு அடங்கிச் சற்று அமைதி ஏற்பட்டதும் மகேந்திர பல்லவர் மேலும் சொன்னுர் :—

"சபையோர்களே! நீங்கள் சொல்கிறபடி பல்லவ சாம்ராஜ்யம் என் ஒருவனையே நம்பி யிருப்பதாக நான் ஒத்துக்கொள்ள வில்லை. இதோ என் வீரமகன் மாமல்லன் பல்லவர் குலப் பெருமையை நிலைநாட்டுவதற்கு இருக்கிருன். ஆனுல் வாதாபி மன்னனை நான் அவனுடைய படை வீட்டில் சந்தித்தது வெறும் சாஹஸத்துக்காக அல்ல. புலிகேசியை நான் நேரில் பார்ப்பதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது.

சற்று முன்னுல் உங்களை யெல்லாம் பெருங் கலக்கத்துக்கு ஆளாக்கிய நாகநந்தியடிகள் ஒன்பது மாதத்துக்கு முன்னுல் நமது கோட்டைத் தளபதியிடம் ஒரு ஓலை கொடுத்துப் புலிகேசிக்கு அனுப்பி யிருந்தார். ஆயனரிடம் சிற்பக் கலை கற்க வந்திருந்த இந்தப் பிள்ளை அந்த ஓலையில் உள்ள செய்தி இன்னதென்று அறியாமல் எடுத்துக் கொண்டு போனுன். வழியில் இவனிடமிருந்து அந்த ஓலையை நான் வாங்கிக் கொண்டு புலிகேசியின் கூடாரத்துக்குச் சென்றேன். ஆனுல் நான் புலிகேசியிடம் கொடுத்தது நாகநந்தியின் ஓலை அல்ல. நான் மாற்றி எழுதிய ஓலை. அதன் பயனுகவும், நமது வீர சேனுபதி கலிப்பகையாரின் போர்த் திறமை காரணமாகவுந்தான் வாதாபி சைன்யத்தை வடபெண்ணைக் கரையில் எட்டு மாதத்துக்கு மேல் நிறுத்தி வைக்க முடிந்தது. அவ்வளவு பெரு முயற்சி நான் செய்த தெல்லாம் இந்தக் காஞ்சி சுந்தரியைக் காப்பாற்றுவதற்காகத்தான்!......"

"பிரபு! நாகநந்தியின் ஓலையில் என்ன எழுதியிருந்தது?" என்று முதன் மந்திரி சாரங்கதேவர் கேட்டார்.

"காஞ்சி நகரைப் போன்ற பாதுகாப்பு அற்ற நகரம் வேறு இருக்க முடியாதென்றும், வாதாபி சைன்யம் வழியில் எங்கும் தங்காமல் நேரே காஞ்சிக்கு வந்து சேர வேண்டுமென்றும், மூன்றே நாளில் காஞ்சியைப் பிடித்து விடலாம் என்றும் எழுதியிருந்தது!......"

சபையில் அப்போது "ஆஹா!" கார ஒலிகளும் கோப கர்ஜனை முழக்கங்களும் ஒருமிக்க எழுந்தன.

கல்கி

சக்கரவர்த்தி கையமர்த்திக் கூறினுர் :— "சபையோர்களே! நாகநந்தி எழுதி யிருந்தது முற்றும்

* சென்ற இதழில் இச் சம்பவம் 'வெண்ணுற்றங் கரையில்' நிகழ்ந்ததாக அச்சாகி யிருப்பது பிழை; 'வடபெண்ணை' என்றுதான் இருந்திருக்க வேண்டும்.

உண்மை. அப்போது வாதாபி சைன்யம் நேரே காஞ்சிக்கு வந்திருந்தால் மூன்று நாளைக்கு மேல் நாம் தாக்குப் பிடித்திருக்க முடியாது. சளுக்கரின் பதினையாயிரம் போர் யானைகளிலே ஒரு பதினைந்து யானைகள் நமது கோட்டைக் கதவுகளை யெல்லாம் தகர்த்தெறிந்திருக்கும். ஆகா! அப்போது இந்தக் காஞ்சி நகரின் கதி என்ன ஆகியிருக்கும் தெரியுமா? வைஜயந்தி பட்டணத்துக்கு நேர்ந்த கதிதான் காஞ்சிக்கும் நேர்ந்திருக்கும். உண்மையில், காஞ்சியின் மேல் புலிகேசிக்கு இருந்த கோபத்தைத்தான், பாவம், அவன் வைஜயந்தி பட்டணத்தின் மேல் காட்டினான். சபையோர்களே! மயூர சன்மனுடைய வழியில் வந்த கதம்பகுல மன்னர்கள் வாழையடி வாழையாக வாழ்ந்து அரசு செலுத்திய வைஜயந்தி பட்டணம் இருந்த இடத்தில் இப்போது கரியும் சாம்பரும் மேடிட்டிருக்கின்றன!......"

சபையில் மறுபடியும் வியப்பொலிகளும் இரக்கக் குரல்களும் எழுந்தன.

மகேந்திர பல்லவர் தொடர்ந்து சொன்னார்:—"சபையோர்களே! இந்தக் காஞ்சிமா நகரம், உலகம் உய்ய அவதரித்த புத்த பகவானுடைய காலத்திலிருந்து ஆயிரம் வருஷமாகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்குகிறது. 'கல்வியிற் கரையிலாத காஞ்சி' என்று நமது புலவர் பெருமான் சிவநேசச் செல்வர் திருநாவுக்கரசரால் பாடப் பெற்ற இந்தத் திருநகரின் புகழானது, சீன தேசம், சாவகத் தீவு, யவனர் நாடு, ரோமாபுரி ஆகிய தூர தூர தேசங்களிலெல்லாம் நெடுங்காலமாகப் பரவியிருக்கிறது. இப்பேர்ப்பட்ட நகரம் என்னுடைய காலத்தில் அழிந்தது என்னும் அபகீர்த்தியை நான் அடைய விரும்பவில்லை. இந்தக் காஞ்சி நகரைப் பாதுகாப்பதுதான் என்னுடைய முதற் கடமை. அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்கு நீங்கள் என்னுடன் ஒத்துழைப்பீர்களா?" என்று சக்கரவர்த்தி கேட்டபோது, சபையினர் ஒரு முகமாக "அப்படியே! அப்படியே!" என்று கோஷித்தார்கள்.

சக்கரவர்த்தி மறுபடியும் கையமர்த்திச் சத்தம் அடங்கிய பிறகு, "இந்த யுத்தம் நேர்ந்ததற்கு மூல காரணம் இன்னதென்று உங்களுக்குத் தெரிவித்தேன். பாரவி கவி காஞ்சிக்கு வருவதற்கு நான்தான் காரணம். அந்தப் புலவர் சிரோமணி காஞ்சியைப் பற்றி எழுதிய கவிதா வர்ணனைகளினால்தான் புலிகேசியின் உள்ளத்தில் பொறாமைத் தீ மூண்டது. அந்தத் தீதான் இப்போது காஞ்சியையே எரித்து விடுவதற்காக மூண்டு எழுந்து வருகிறது. மந்திரிமார்களே! அமைச்சர்களே! இது என்னால் நேர்ந்த யுத்தம். ஆகையால் என் போக்கில் இதை நடத்தி முடிப்பதற்கு உங்களிடம் அனுமதி கோருகிறேன்."

"அப்படியே!" என்று மீண்டும் சபையில் கோஷம் எழுந்தது.

**பி**ன்னர் மகேந்திரர், சபையில் பின் வரிசைகளில் இருந்த தென் பல்லவ நாட்டின் கோட்ட*த் தலைவர்களைப் பார்த்து, "இது விஷயத்தில் முக்கியமாக அபிப்பிராயம் சொல்ல வேண்டியவர்கள் நமது கோட்டத் தலைவர்கள்தான். உங்களுடைய மனதிலுள்ளதைக் கொஞ்சமும் தயங்காமல் சொல்லுங்கள். கோட்டைக்குள் இருக்கப் போகும் எங்களைக் காட்டிலும் வெளியில் இருக்கப் போகும் நீங்கள்தான் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாக வேண்டியிருக்கும். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொள்ளச் சித்தமாயிருக்கிறீர்களா?" என்று கேட்க,

"சித்தம்! சித்தம்!" என்று கோட்டத் தலைவர்கள் முழங்கினார்கள்.

"நாளை சூரியோதயத்துக்குள்ளே வாதாபி சைன்யம் நமது கோட்டையை நெருங்கிவிடும். அதற்கு முன்னால், பொழுது புலர்வதற்குள்ளே, நீங்கள் எல்லாரும் நகரை விட்டு வெளியேறி விட வேண்டும். அவரவர்களுடைய ஊருக்கு விரைந்து செல்ல வேண்டும். காஞ்சி நகர் முற்றுகைக்கு உள்ளாகியிருக்கும்போது உங்களுக்கும் கோட்டைக்குள்ளேயிருக்கும் எங்களுக்கும்

* 'கோட்டம்' என்பது இந்தக் காலத்துத் தாலுகாவைப் போன்ற இராஜ்யப் பகுதி.

எவ்விதப் போக்கு வரவும் இராது. செய்தி அனுப்பக்கூட முடியாது. கோட்டையைக் கைப்பற்ற முயன்று புலிகேசி தோல்வியடையும்போது அவனுடைய கோபத்தை யெல்லாம் சுற்றிலுமுள்ள நாட்டுப்புறங்களின் மீது காட்டுவான். அதற்கெல்லாம் நீங்கள் ஆயத்தமாயிருக்க வேண்டும். கோட்டத் தலைவர்களே! நாட்டாண்மைக்காரர்களே! நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் சகலவிதமான தியாகங்களுக்கும் சித்தமாயிருக்கிறீர்களா? வாதாபி அரக்கர் படையினால் நேரக்கூடிய கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொள்வீர்களா? நாட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டு மக்கள் பட்டினி கிடந்து மடிய நேர்ந்தாலும் நேரிடலாம். அதற்கும் நீங்கள் மனங் கலங்காமல் இருப்பீர்களா?'' என்று சக்கரவர்த்தி கம்பீரமான குரலில் கேட்க, செஞ்சிக் கோட்டத் தலைவன் சடையப்ப சிங்கன் எழுந்து நின்று கூறினான்:—

''பல்லவேந்திரா! யோசிப்பதற்கு ஒன்றுமேயில்லை. தக்ஷிண பாரத நாட்டுக்குத் திலகம் போன்றது இந்தக் காஞ்சிமா நகரம். பல்லவ இராஜ்யத்தின் மணி மகுடமாக விளங்குவது காஞ்சிமா நகரம். காஞ்சி அழிந்தால், பிறகு யார் உயிரோடிருந்து என்ன பிரயோஜனம்? காஞ்சி நகரைக் காப்பாற்றுவதற்காக எந்தவிதமான தியாகங்களைச் செய்யவும் நாங்கள் சித்தமாயிருக்கிறோம். அது மட்டுமல்ல. தங்களுடைய அறிவிலும் ஆற்றலிலும் எங்களுக்கெல்லாம் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. தங்களுடைய சித்தம் எதுவோ அதன்படி நடந்து கொள்கிறோம். தங்களுடைய கட்டளை எதுவானாலும் நடத்தி வைக்கக் காத்திருக்கிறோம். நான் கூறியதுதான் இங்கேயுள்ள எல்லாருடைய அபிப்பிராயமும்......''

''ஆம்! ஆம்!'' என்று கோட்டத் தலைவர்கள் அனைவரும் ஏகமனதாக ஆமோதித்தார்கள்.

இச்சமயத்தில் சபா மண்டபத்தின் வாசற் புறத்திலிருந்து தூதன் ஒருவன் வந்தான். அவன் சக்கரவர்த்தியை நெருங்கிப் பணிந்துவிட்டு, கிழக்குக் கோட்டை வாசலின் மேல் மாடத்திலிருந்து பார்த்தால், தூரத்தில் ஒரு பெரும் புழுதிப் படலம் தெரிகிறதென்றும், கடல் புரண்டு வருவது போன்ற பெரு முழக்கம் கேட்கிறது என்றும் தெரியப்படுத்தினான்.

''சபையோர்களே! வாதாபி சைன்யம் வந்து விட்டது!'' என்று மகேந்திர பல்லவர் உரத்த குரலில் அறிவித்தார்.

சபையோர் அனைவரும் ஒருமுகமாக எழுந்து, ''மகேந்திர பல்லவர் வாழ்க! வீர மாமல்லர் வாழ்க! அரக்கன் புலிகேசி அழிக!'' என்று கோஷித்தார்கள்.

மகேந்திரர், இடி முழக்கம் போன்ற குரலில், ''சபையோர்களே! வெறும் கோஷங்களுக்குரிய காலம் போய் விட்டது. நம்மில் ஒவ்வொருவரும் தமது வீர தீர சாகஸங்களைக் காரியத்தில் காட்ட வேண்டிய சமயம் வந்து விட்டது. அமைச்சர்களே! மந்திரிகளே! இத்துடன் இன்று சபை கலைகிறது. நாளை முதல் முற்றுகை நீடித்திருக்கும் வரையில் ஒவ்வொரு நாள் இரவும் இரண்டாம் ஜாமத்தில் இங்கே மந்திராலோசனை சபை கூடும். இப்போது போய் அவரவர்களுடைய காரியங்களைப் பாருங்கள்!'' என்று கூறியதும் அமைச்சர்களும் மந்திரிகளும் வெளியேறினார்கள்.

''கோட்டத் தலைவர்களே! நீங்கள் சற்று முன் கொடுத்த வாக்குறுதியினால் மிக்க சந்தோஷம் அடைந்தேன். அந்த வாக்குறுதியை மட்டும் நீங்கள் நிறைவேற்றி வைத்தால் புலிகேசியைக் கட்டாயம் வென்று ஜயக்கொடி நாட்டுவேன். நீங்கள் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதை யெல்லாம் அவ்வப்போது சத்ருக்னனும் அவனுடைய ஒற்றர் படையைச் சேர்ந்தவர்களும் வந்து உங்களுக்குத் தெரிவிப்பார்கள். அதன்படி நடந்து கொள்ளுங்கள். இப்போது நீங்கள் உடனே கிளம்பிச் செல்ல வேண்டும். ஏகாம்பரநாதர் அருள் இருந்தால் ஒரு வருஷத்திற்குள் நாம் மறுபடியும் இந்தக் காஞ்சி நகரிலேயே சந்திப்போம்!'' என்று

கூறி, தளபதி பரஞ்சோதியைப் பார்த்து, "தளபதி! இவர்களைத் தெற்குக் கோட்டை வாசலுக்கு அழைத்துக் கொண்டு போங்கள்! இவர்கள் அகழியைத் தாண்டிச் சென்றதும், பாலத்தை உடைத்து எறிந்து விட வேண்டும். மற்றப்படி கோட்டை ஜாக்கிரதை சம்பந்தமாக நாம் நிர்மானித்தபடி காரியங்கள் செய்திருக்கிறீர்கள் அல்லவா?" என்று கேட்க, "ஆம், பிரபு! தெற்கு வாசலைத் தவிர மற்ற மூன்று வாசல்களையும் முழுதும் அடைத்தாகி விட்டது. பாலங்களையும் தகர்த்தாகி விட்டது. மதிள் சுவரின்மேல் பதினாயிரம் வீரர்கள் வேலுங் கையுமாய் ஆயத்தமாயிருக்கிறார்கள்!" என்றார் தளபதி பரஞ்சோதி.

பரஞ்சோதியும் வெளியூர்க் கோட்டைத் தலைவர்களும் சென்ற பிறகு, சபா மண்டபத்தில் சக்கரவர்த்தியும் மாமல்லரும் மட்டும் தனித்திருந்தார்கள். மாமல்லரின் முகம் உற்சாகம் குன்றி வாட்ட முற்றிருந்தது.

சக்கரவர்த்தி மாமல்லர் அருகில் சென்று அவருடைய தோளின்மீது கையை வைத்து, "மாமல்லா!...... இந்த யுத்தத்தை என் போக்கில் நடத்த எனக்கு நீயும் அனுமதி கொடுக்கிறாயல்லவா?" என்று கேட்டார்.

"அப்பா! என்னை ஏன் கேட்கிறீர்கள்? உங்கள் விருப்பம் எதுவோ அதுவே எனக்கும் சம்மதம்!" என்றார் மாமல்லர்.

"சந்தோஷம், குமாரா! இப்பொழுது போய் உன் தாயாரிடம் நான் பத்திரமாய் வந்து சேர்ந்து விட்டதைச் சொல்லு. பொழுது விடிவதற்குள் எனக்கு இன்னும் ஒரு காரியம் மிச்சமிருக்கிறது. அதையும் முடித்துவிட்டு அரண்மனைக்கு வந்து சேருகிறேன்!" என்று மகேந்திரர் கூற, மாமல்லர் உற்சாகம் குன்றிய முகத்துடனே அரண்மனை அந்தப்புரத்தை நோக்கிச் சென்றார். சக்கரவர்த்தியோ வாசலில் நின்ற குதிரை மீதேறி இராஜ விஹாரத்தை நோக்கிச் செல்லலானார்.

## அத்தியாயம் 56

# முற்றுகை தொடங்கியது

மறுநாள் காலை சூரியோதயம் ஆகும் சமயத்தில் கமலி தன்னுடைய வீட்டுத் திண்ணையில் கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். இரவெல்லாம் கண் விழித்தபடியாலும் கண்ணீர் விட்டபடியாலும் அவளுடைய கண்கள் கொவ்வைப்பழம்போல் சிவந்தும் வீங்கியும் போயிருந்தன.

கண்ணபிரானின் தகப்பனார் அவள் அருகில் உட்கார்ந்து ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தார்.

முதல் நாள் சாயங்காலம் குமார சக்கரவர்த்தி திரும்பி வந்த செய்தி கிடைத்தவுடனேயே கண்ணனும் அவருடன் திரும்பி வந்திருப்பான் என்று கமலி எதிர்பார்த்தாள். புள்ளலூர்ப் போரில் வெற்றிமாலை சூடிய வீரரை வரவேற்க நகர மாந்தரெல்லாம் திரண்டு போனபோது தானும் போவதாக அவள் சொன்னாள். ஆனால் கண்ணபிரானின் தந்தை அவள் கர்ப்பவதி என்பதை முன்னிட்டுத் தடுத்து நிறுத்திவிட்டு, தான் போய்க் கண்ணனைக் கையோடு அழைத்து வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார். இரவு வெகுநேரம் கழித்து அவர் தனியாகத் திரும்பி வந்து சேர்ந்து, கண்ணன் மாமல்லருடன் வரவில்லையென்றும், மாமல்லர் அரண்மனையிலிருந்து நேரே மந்திராலோசனை சபைக்குப் போய்விட்டபடியால் பார்த்துக் கேட்கவும் முடியவில்லையென்றும் தெரிவித்தார்.

காஞ்சி நகரில் யாருமே அன்றிரவு தூங்கவில்லையாதலால், மூன்றாம் ஜாமத்தில் சக்கரவர்த்தியும் திரும்பி வந்து விட்ட செய்தி கிடைத்தது. நாலாம் ஜாமத்தில் வாதாபிப் படைகள் கோட்டைக்குச் சமீபத்தில் வந்துவிட்ட செய்தியும், கோட்டை வாசல்கள் அடைக்கப் பட்டுப்

பாலங்கள் தகர்க்கப்படும் செய்தியும் கிடைத்தன.

ஆகவே, இனிமேல் கண்ணன் கோட்டைக்குள் வந்து சேர்வதற்கே இடமில்லை யென்று ஏற்பட்டது.

இதனாலேதான் கமலி துயரக்கடலில் ஆழ்ந்திருந்தாள்.

அந்தச் சமயத்தில் திடீரென்று அங்கே சாக்ஷாத் கண்ணனே வீட்டு வாசலிலே வந்து நின்றால், அவர்களுக்கு எப்படியிருந்திருக்கும்?

கமலி சட்டென்று எழுந்து "கண்ணா!" என்று அலறிக் கொண்டு ஓடி அவனைக் கட்டிக்கொள்ள எண்ணியவள், கண்ணனுக்குப் பின்னால் சக்கரவர்த்தி குதிரையில் வருவது கண்டு நாணமும் திகைப்பும் அடைந்து நின்றாள்.

"கமலி! கண்ணனை மெதுவாய்க் கொண்டு வந்து சேர்த்து விட்டேன். இனிமேல் அவனை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்வது உன்னுடைய பொறுப்பு!" என்று சக்கரவர்த்தி புன்னகையுடன் கூறினார். பிறகு, "உன்னுடைய சௌக்யத்தைப் பற்றிச் சிவகாமி ரொம்ப விசாரித்தாள், அம்மா! உனக்கு ஆண் குழந்தை பிறந்தால், உடனே சொல்லியனுப்பும்படி கூறினாள். பெண்ணாய்ப் பிறந்தால் சொல்லியனுப்ப வேண்டாமாம். பெண் ஜன்மம் அவ்வளவு துரதிருஷ்ட ஜன்மமாம். பெண்ணாய்ப் பிறந்தவர்களால் ஆண்கள் படும் பாடு ஆண் பிள்ளைகளைக் கேட்டால் அல்லவா தெரியும்! என்ன, அசுவபாலரே! நான் சொல்வது உண்மைதானே!" என்று கேட்டுக் கொண்டே சக்கரவர்த்தி குதிரையைச் செலுத்திக் கொண்டு போனார்.

கண்ணபிரானைக் கண்டதும், அவனைப் பாய்ந்து தழுவிக் கொள்ள விரைந்து வந்த கமலி, சக்கரவர்த்தியின் வருகையினால் ஆர்வம் தடைப்பட்டு இப்போது கண்ணபிரானைக் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே வீட்டிற்குள் சென்றாள். கண்ணபிரான் தந்தைக்கு முகமன் கூறிவிட்டுக் கமலியைத் தொடர்ந்து உள்ளே சென்றான்.

"இதென்ன, கமலி! நான் வந்ததில் உனக்குச் சந்தோஷம் இல்லையா? என்னைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் உள்ளே வந்து விட்டாயே! அல்லது கண் தெரியவில்லையா?" என்று கண்ணபிரான் கேட்க, கமலி "ஆமாம், கண் தெரியவில்லைதான்! இரவெல்லாம் அழுதழுது கண் வீங்கிப் போய் விட்டது" என்றாள்.

"ஐயோ, பாவம்!" என்று சொல்லிக் கொண்டு, கண்ணபிரான் அவள் அருகில் நெருங்க, கமலி அவனுடைய கையை உதறி, "இந்த அருமையெல்லாம் நேற்று எங்கே போய்விட்டது? நேற்றிரவே ஏன் வரவில்லை?" என்று கேட்டாள்.

"நேற்றிரவே ஏன் வரவில்லையா? எனக்கும் உனக்கும் மத்தியில் ஒரு பெரிய அகழியும் அதில் முதலைகளும் அப்பால் ஒரு பெரிய மதிள் சுவரும் இருந்தபடியாலேதான்" என்றான் கண்ணன்.

"அப்படியா? நீ இரவெல்லாம் கோட்டைக்கு வெளியிலா இருந்தாய்? எப்பொழுது உள்ளே வந்தாய்? வாதாபி சைன்யம் கோட்டையைச் சூழ்ந்து விட்டதாமே; அகழிப் பாலங்களை எல்லாம் உடைத்து விட்டார்களாமே; நீ எப்படி உள்ளே வந்தாய்? எல்லாம் விவரமாகச் சொல்" என்று கமலி பரபரப்புடன் கேட்டாள்.

"கமலி! நான் என்னத்தை என்று சொல்ல! நான் பிறந்த கதையைச் சொல்லவா, வளர்ந்த கதையைச் சொல்லவா? புள்ளலூர்ப் போர்க்களத்துக்குப் போன கதையைச் சொல்லவா? வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடியதைச் சொல்லவா? மாமல்லர் ஏற வேண்டிய இரதத்தில் புத்த பிக்ஷுவை ஏற்றிக் கொண்டு வந்ததைச் சொல்லவா? கோட்டைக்கு வெளியே ராத்திரி எல்லாம் அலைந்து திரிந்ததைச் சொல்லவா?" தான் காஞ்சியிலிருந்து கிளம்பியது முதல் நடந்ததை எல்லாம் கண்ணன் கூறி வந்தான்.

வராகநதிக் கரையில் புத்த பிக்ஷு சிங்க இலச்சினையைக் காட்டி அவனுடைய ரதத்தில் ஏறிக்கொண்டதையும், சற்று தூரத்தில் மரத்தின் மறைவிலிருந்து சக்கரவர்த்தி ஜாடை காட்டி பிக்ஷுவை ஏற்றிக் கொண்டு போகும்படி கட்டளையிட்டதையும்

சொல்லி விட்டு, கண்ணபிரான் மேலும் கூறிய வரலாறு பின் வருமாறு :—

குதிரைகளைக் கண்ணபிரான் எவ்வளவு வேகமாகத் துரத்திய போதிலும் புத்த பிக்ஷுக்கு அதெல்லாம் போதவில்லை. மேலும் மேலும் அவசரப் படுத்தினார். வழியில் இரண்டிடத்தில் குதிரைகளை மாற்றிக் கொண்டு, அஸ்தமித்து ஒரு நாழிகைக்குப் பிறகு காஞ்சிக் கோட்டைக்கு ஒரு காத தூரத்தில் உள்ள பௌத்த காஞ்சிக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். பௌத்த காஞ்சி ஜன சஞ்சாரமற்றுப் பாழடைந்து கிடந்தது. ஆனால், அங்கே உள்ள புத்த விஹாரத்துக்குள் புகுந்து, புத்த பிக்ஷு இன்னொரு இளம் பிக்ஷுவை அழைத்துக் கொண்டு வந்தார். இளம் பிக்ஷுவையும் ரதத்தில் ஏற்றிக் கொண்டு, இரவு ஒரு ஜாமத்துக்குத் தெற்குக் கோட்டை வாசலை அடைந்தார்கள். அங்கே நாகநந்தி அடிகள் இளம் பிக்ஷுவிடம் சிங்க இலச்சினையைக் கொடுத்து, கோட்டைக்குள் போகும்படி கூறினார். இளம் பிக்ஷுவுக்காகக் கோட்டை வாசல் திறந்து மறுபடியும் மூடிக்கொண்டது.

பிறகு, பெரிய பிக்ஷு சொன்னபடி அகழி ஓரமான சாலையின் வழியாகக் கண்ணபிரான் ரதத்தைச் செலுத்திக் கொண்டு போனான். கொஞ்ச தூரம்



போனதும் பிக்ஷு ரதத்திலிருந்து இறங்கி, அங்கேயே கண்ணபிரானைக் காத்திருக்கச் சொல்லிவிட்டு, காட்டுக்குள் நுழைந்து போனார். சற்று நேரத்துக்கெல்லாம் அகழியில் படகு செல்லும் சப்தம் கேட்கவே, கண்ணபிரான் அந்தத் திசையில் கூர்ந்து நோக்கினான். அப்போதுதான் கீழ் வானத்தில் சந்திரன் உதயமாகியிருந்தது. நீண்டு பரந்த மர நிழல்களுக்கு மத்தியில் ஆங்காங்கு ஊடுருவி வந்த நிலாக்கிரணங்களின் சஞ்சல ஒளியில், அகழியில் ஒருபடகு போவதும் அதில் இரண்டு பிக்ஷுக்கள் இருப்பதும் கண்ணபிரானுக்குத் தெரிந்தது. படகு அக்கரை சென்றதும் இருவரும் இறங்கினார்கள். கோட்டை மதிளின் சுவரோரமாகச் சென்றார்கள். என்ன அதிசயம்! திடீரென்று இருவரும் மாயமாக மறைந்தார்கள்.

கண்ணபிரான் நெடு நேரம் வரை அங்கேயே காத்திருந்தான். என்ன செய்கிறதென்று அவனுக்குப் புரியவில்லை. அவர்கள் எப்படி மறைந்திருப்பார்கள் என்று மூளையைச் செலுத்தித் தீவிரமாக யோசனை செய்தான். ஒருவேளை கோட்டைச் சுவரில் இரகசிய வழி இருக்குமோ என்ற எண்ணம் தோன்றியதும் அவனுடைய உள்ளம் கலங்கியது. புத்த பிக்ஷு தன்னை அங்கேயே இருக்கச் சொல்லியிருப்பதால், எப்படியும் திரும்பி வருவாரென்றும், அப்போது ரகசியத்தைக் கண்டு பிடிக்கலாமென்றும் எண்ணிக் கோட்டைச் சுவரில் அவர்கள் மறைந்த இடத்தில் வைத்த கண்ணை வாங்காமல் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். எப்படியோ அவனையறியாமல் தூக்கம் வந்து கண்ணயர்ந்துவிட்டான். திடீரென்று அவன் கண் விழித்தபோது, தூரத்தில் கடல் குமுறிக் கொண்டு புரண்டெழுந்து வருவது போன்ற பயங்கரமான சப்தம் கேட்டது. முன்னொரு சமயம் ஏரி உடைத்துக் கொண்டு வெள்ளம் வந்த சப்தத்தை அவன் கேட்டிருக்கிறபடியால், மிக்க பீதியடைந்தவனாய், மள மளவென்று ஒரு மரத்தின்மேல் ஏறிச் சப்தம் வந்த திசையை நோக்கினான். வெகு தூரத்தில் வெண்ணிலாவில் யானைகளும், குதிரைகளும், காலாட்களும், குடைகளும், கொடிகளும், வேல்களும், வாள்களுமாய்த் திரண்டு வந்த சேனா சமுத்திரத்தைக் கண்டான். வாதாபி சைன்யந்தான் அது என்று தெரிந்து கொண்டு, எப்படியாவது கோட்டைக்குள் புகுந்துவிட வேண்டும் என்று தீர்மானித்து, ரதத்தை அவசரமாகச் செலுத்திக் கொண்டு தெற்குக் கோட்டை வாசலை அணுகினான். அப்போதுதான், அங்கு அகழியின் மேலிருந்த பாலத்தைத் தகர்த்து அகழிக்குள்ளே போட்டுக் கொண்டிருந்



தார்கள். கண்ணபிரான் சத்தம் போட்டுக் கோட்டைக் காவலாளிகளை அழைத்ததில் ஒன்றும் பலன் இல்லை. சற்று நேரம் அங்கேயே தயங்கி நின்ற பிறகு ஒரு யோசனை உதித்தது. 'புத்த பிக்ஷுக்கள் புகுந்த இரகசிய வழி ஒரு வேளை தேடினால் கிடைக்கும்; அதன் வழியாய்க் கோட்டைக்குள் போய்விடலாம்' என்ற ஆசையுடன் திரும்பவும் அதே இடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கு வந்ததும், அகழியை எப்படிக் கடப்பது என்ற கேள்வி ஏற்பட்டது. நீந்திப் போகலாம் என்று நினைத்ததும், அகழியில் நூற்றுக் கணக்கான முதலைகள் இருப்பது நினைவு வந்து கதிகலங்கிற்று. இதற்குள்ளாகப் படைகள் வரும் முழக்கம் இன்னும் வெகுவாக நெருங்கிக் கேட்கலாயிற்று.

'முதலைகளுக்கு இரையானாலும் ஆகலாம்; எதிரிகளிடம் சிக்கக் கூடாது' என்று எண்ணிக் கண்ணபிரான் அகழியில் இறங்கத் தீர்மானித்தபோது திடீரென்று கோட்டை மதில் எதிரே ஒரு கதவு திறந்து துவாரம் காணப்பட்டது. அதற்குள்ளிருந்து இளம் புத்தபிக்ஷு ஓடி வருவது தெரிந்தது. கண்ணபிரான் சட்டென்று மரத்தின் பின்னால் மறைந்து கொண்டான். இளம்பிக்ஷு படகில் ஏறுவதையும், இக்கரைக்கு அதைச் செலுத்துவதையும் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது கண்ணபிரானுடைய மூளை தீவிரமாக வேலை செய்தது. இதில் ஏதோ மோசடியான சூழ்ச்சி இருக்கிறதென்றும், இந்த இளம் பிக்ஷுவைப் போக விடக் கூடாதென்றும் தீர்மானித்தான். இளம் பிக்ஷு கரையில் இறங்கியவுடனே படகை ஜலத்தில் கவிழ்க்கப் போவதைப் பார்த்ததும் கண்ணன் பாய்ந்து வந்து அதைத் தடுத்து, இளம் பிக்ஷுவையும் தூக்கிப் படகில் போட்டுக் கொண்டு, அதில் தானும் ஏறினான். மெதுவாகப் படகை அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்து இளம் பிக்ஷுவையும் பலவந்தமாக இறக்கினான்.

இளம் பிக்ஷுவினால் சுவரில் திறக்கப்பட்ட துவாரம் அப்படியே இருந்தது. ஏறக்குறைய அப்போது பொழுது புலரும் சமயம். இளம் பிக்ஷுவை அந்த துவாரத்திற்குள் தள்ளிவிட்டு, தானும் உள்ளே புகுந்தான். அப்போது, அகழிக்கு அப்பால் அவன் நிறுத்திவிட்டு வந்த ரதத்தின் ஞாபகம் வந்தது. அந்த நினைவினால் அவன் திரும்பி வெளியே பார்த்தபோது மிகவும் உறுதி வாய்ந்த வஜ்ரக் கை யொன்று தன்னைப் பிடித்து உள்ளே தள்ளுவதை உணர்ந்தான். அந்தக் கை மகேந்திர பல்லவருடைய வைரம் பாய்ந்த கைதான் என்பதை உணர்ந்ததும் கண்ணனுடைய ஆச்சரியம் அளவு கடந்ததாயிற்று. அப்போது சக்கரவர்த்தி, "கண்ணா! இந்தக் கள்ள பிக்ஷு — பல்லவ ராஜ்யத்தில் இருந்த வாதாபியின் கடைசி ஒற்றன் — தப்பித்துப் போகாமல் பிடித்துக் கொண்டு வந்ததால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஒரு மகத்தான சேவை செய்திருக்கிறாய். அதற்குப் பதிலாக இங்கே தாமதித்து நின்று கெடுதல் செய்து விடாதே. [வா, போகலாம். கமலி உனக்காகக் கவலையுடன் காத்திருக்கிறாள்" என்று சொல்லிக் கொண்டே அந்த ரகசிய வாசலுக்குள்ளே தானும் நுழைந்து ரகசியக் கதவையும் சாத்தினார்.

அவர்கள் புகுந்த இடம் காஞ்சி நகரின் பிரசித்தமான புத்தர் விஹாரமென்று தெரிந்தது.

• • •

மேற்கண்ட வரலாற்றை எல்லாம் கூறிவிட்டு, கண்ணபிரான் "கமலி! ஏதோ உன்னுடைய மாங்கல்ய பலத்தினால் தான் நேற்றிரவு நான் பகைவர்களிடம் சிக்காமலும், முதலைகளுக்கு இரையாகாமலும் பிழைத்து வந்தேன். இன்னமும் நான் பிழைத்து வந்தது உண்மைதானா என்று எனக்குச் சந்தேகமாய்த்தான் இருக்கிறது. உன்னுடைய இரு கரங்களினாலும் என்னைக் கட்டிக் கொண்டு பார்த்து, "நான் உண்மையில் நான்தானா என்று பார்த்துச் சொல்லு" என்றான்.

"முடியாது, கண்ணா, முடியாது! உன்னைக் கட்டிக்கொண்டால் சின்னக் கண்ணனுக்குக் கோபம்" என்று கூறிப் புன்னகை புரிந்தாள் கமலி.

---

## சிவகாமியின் சபதம் இரண்டாம் பாகம் முற்றிற்று

# விருத்திரன்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

மூன்று உலகங்களுக்கும் அதிபதியாக இருந்த இந்திரன் ஒரு காலத்தில் தேவர்களுக்குரிய மரியாதையை மறந்து மதமத்தனாகிப் போனான். சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் அரசன் யாருக்காகவும் எழுந்து நிற்க வேண்டியதில்லை என்று சாஸ்திரம் இருப்பதாகக் கேள்விப்பட்டு, தேவ புரோகிதர் சபைக்கு வந்தபோது எழுந்து ஆசனம் அளித்தல் முதலிய உபசாரங்கள் செய்யாமல் சும்மா இருந்தான். எல்லா வித்தைகளிலும் முதல் ஸ்தானம் பெற்ற மகானும் தேவாசுரர்களுடைய பூஜைக்கு யோக்கியருமான பிருகஸ்பதி இதைக் கண்டு வருத்தப்பட்டார். இது செல்வத்தால் உண்டான தோஷம் என்று எண்ணி ஒன்றும் பேசாமல் சபையைவிட்டுத் தம் இல்லத்துக்குப் போய்விட்டார். தேவகுரு இல்லாமல் சபை சோபிக்கவில்லை.

தான் செய்த அபராதத்தை இந்திரன் உணர்ந்துகொண்டு இதனால் என்ன நேரிடுமோ என்று பயத்தை அடைந்தான். "ஆசாரியருடைய காலில் விழுந்து சமாதானப் படுத்திக்கொள்ள வேண்டும்" என்று தீர்மானித்தான்.

பிருகஸ்பதியோ யாராலும் காணமுடியாத மாயநிலையை அடைந்து மறைந்து போனார். இந்திரன் பெருமுயற்சி செய்தும் குருவானவர் கிடைக்காமல் போனபடியால் கவலைக்கு இரையானான்.

• • •

ஆசாரியனை இழந்த உடனே இந்திரனுடைய பலம் குறைய ஆரம்பித்தது. அசுரர்களுடைய பலம் அதிகரித்தது. அவர்கள் தேவர்களைத் தாக்க ஆரம்பித்தார்கள். தேவர்கள் பீடிக்கப்பட்டதைக் கண்டு பிரம்மா இரக்கம் கொண்டு "தேவர்களே! பிருகஸ்பதியை இழந்தீர்கள். இது இந்திரனுடைய மதியீனத்தினால் உண்டாயிற்று. இப்போது நீங்கள் துவஷ்டாவின் குமாரனும் தபஸ்வியுமான விசுவரூபனை வணங்கி அவனை ஆசாரியனாகக் கொள்ளுங்கள். உங்கள் காரியங்கள் சரிவர நடைபெறும்" என்றான்.

பிரம்மாவினால் இவ்வாறு சொல்லப்பட்ட தேவர்கள் சந்தோஷமடைந்து அவ்வாறே செய்தார்கள். விசுவரூபன் வயதில் மிகக் குறைந்தவன். ஆயினும் மகா தபஸ்வி. தேவர்கள் அவனிடம் சென்று "நீ சிறியவனாக இருந்தாலும் எல்லா வேதங்களையும் அறிந்தவன். எங்களுக்கு நீ புரோகிதனாக இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். விசுவரூபன் ஒப்புக் கொண்டான்.

தபஸ்வியும் சுத்தனுமான அவனுடைய சிக்ஷையின் பயனாகத் தேவர்களும் இந்திரனும் அசுரர்களுடைய தொந்தரவுகளிலிருந்து காப்பாற்றப்பட்டார்கள்.

விசுவரூபன் துவஷ்டாவின் குமாரனானாலும் அவனுடைய தாயார் தைத்ய குலத்தைச் சேர்ந்தவள். அந்தக் காரணத்தினால் விசுவரூபனைப் பற்றி இந்திரன் சந்தேகம் கொண்டான். "இவனுடைய தாய் நம்முடைய விரோதிகளின் குலத்தைச் சேர்ந்தவள். ஆகையால் இவன் அசுரர்களிடம் பட்சபாதம் கொண்டவனாக இருப்பான்" என்று எண்ணினான். இந்தச் சந்தேகம் வர வர அதிகரித்தது.

விசுவரூபன் இருந்தால் தனக்கு அபாயம் வரும் என்று இந்திரன் தீர்மானித்து விசுவரூபனை ஏமாற்றி அவன் தவத்தைக் கெடுப்பதற்காக அப்ஸரசு ஸ்திரீகளை ஏவினான். அவர்கள் இந்திரன் உத்தரவுப்படி பலவித சிருங்கார சேஷ்டைகளைச் செய்தும் நர்த்தனம் செய்தும் ஏமாற்றப் பார்த்தார்கள். விசுவரூபன் இதற்கெல்லாம் இணங்காமல் தன் பிரமசரியத்தில் உறுதியாக இருந்தான். அதன்மேல் இந்திரன் இந்த வழியில் வெற்றிபெற முடியாது என்று தீர்மானித்துக் கொண்டு பெரும் பாப எண்ணத்தில் இறங்கினான். வச்சிராயுதத்தைப் பிரயோகித்து விசுவரூபனைக் கொன்றே விட்டான்.

இவ்வாறு தீராத பாபத்தை அடைந்த இந்திரன் அதற்காகப் பிராயச்சித்தம் செய்து தன் பாபத்தை உலகத்துக்குப் பங்கு செய்து கொடுத்தான் என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே பூமியில் சில பாகம் உவர்நிலமாயிற்று என்றும் ஸ்திரீகளுக்கு ஆடவர்களுக்கில்லாத சில இயற்கைக் கஷ்டங்கள் வந்து சேர்ந்தன வென்றும்



# அழகு பெற

பண்டைக்கால சௌந்தர்யமுறைகள் அனேகமாகச் சிக்கலானவை. வெகு தொல்லையும் கொடுப்பவை. நிச்சயமாக பயன்படுமென்பதும் சந்தேகந்தான். சிலவேளைகளில் ஆபத்து விளைவித்தாலும் விளைக்கலாம். இந்நாள்களில் அக்கர்நாடக முறைகளுக்கு இடமில்லை

பாண்ட்ஸ் க்ரீம்கள் சாஸ்திரீயமாகவும் நிச்சயமாக பலனளிக்கும் முறையிலும் அமைந்த சௌந்தர்ய உபகரணங்களாம். உபயோகிப்பதற்கும் மிக சுலபம், ஒவ்வொரு நாளும் சொற்ப நேரம் செலவழித்தாற் போதும். இந்த க்ரீம்கள் மயிர்த் துவாரங்களில் ஆழ்ந்து படிந்து அழுக்கையெல்லாம் போக்கிவிடுகின்றன. சருமத்திற்கு போஷிணையளித்து வெயில், உஷ்ணம், தூசி முதலியன படாமல் பாதுகாக்கவும் செய்கின்றன. உபயோகித்துப்பாருங்கள். சொற்ப வாரங்களுள் உங்கள் வதனம் ரோஜா இதழ்போன்று மிருதுவாகவும் வசீகர காந்தியுடனும் விளங்கும்.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** [illegible]

**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** [illegible]



# பாண்ட்ஸ் க்ரீம்

P. 2528 L

ஜலத்திற்கு நுரையும் கொப்பளமும் தோஷமாக ஏற்பட்டனவென்றும் கதை.

தன் மகன் அக்கிரமமாகக் கொல்லப்பட்டதினால் துவஷ்டாவுக்கு இந்திரன் மேல் பெருங்கோபம் உண்டாகிப் பழியைத் தீர்த்துக் கொள்வதற்காக வேள்வித் தீ வளர்த்து ஹோமம் செய்தான். அதிலிருந்து இந்திரனுக்குச் சத்துருவான விருத்திராசுரன் கிளம்பினான். அக்கினியிலிருந்து உற்பவமான அசுரனைப் பார்த்துத் துவஷ்டா "ஓ! இந்திரசத்துருவே! விருத்தி அடைவாயாக! இந்திரனைக் கொல்வாயாக" என்று சொல்லித் தேவராஜனை எதிர்க்க ஏவி விட்டான்.

• • •

விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் பலத்த யுத்தம் நடந்தது. விருத்திரனுடைய சக்தியே மேலோங்கிற்று. இந்திரன் தோல்வியடைவான் என்று பயந்த ரிஷிகளும் புலவர்களும் மகா விஷ்ணுவினிடம் போய்த் தஞ்சம் அடைந்தார்கள். அப்போது திருமால் அவர்களுக்கு அபயம் சொன்னார். "பயப்படாதீர்கள். இந்திரனுடைய வச்சிராயுதத்தில் நான் பிரவேசிப்பேன். தேவராஜன் முடிவில் வெற்றி அடைவான்" என்றார்.

தேவர்களும் ரிஷிகளும் தைரியம் அடைந்து திரும்பினார்கள். பிறகு ரிஷிகள் விருத்திரனிடம் சென்று "நீ இந்திரனிடம் சினேகமாக இருக்க வேண்டும். இருவரும் சமமாக இருக்கிறீர்கள். இந்த யுத்தம் உலகத்தை மிகவும் பீடிக்கிறது" என்றார்கள். விருத்திரன் ரிஷிகளை வணங்கி, "குற்றமற்றவர்களே! மன்னிக்க வேண்டும்! இந்திரனும் நானும் எவ்வாறு ஒன்றாக முடியும்? இரண்டு சமதேஜசுகளுக்குள் எவ்வாறு நட்பு ஏற்பட முடியும்?" என்றான்.

"அப்படிச் சந்தேகப்பட வேண்டாம். நல்லோர்களுடைய சேர்க்கை உறுதியாகவே இருக்கும்" என்று ரிஷிகள் சொன்னார்கள்.

விருத்திரன் இணங்கினான். "சரி! யுத்தத்தை நிறுத்துகிறேன். ஆனால் எனக்கு இந்திரனிடம் நம்பிக்கை இல்லை. நீங்கள் எனக்கு வரம் தர வேண்டும். உலர்ந்த ஆயுதத்தாலாவது ஈரமான ஆயுதத்தினாலாவது கல்லினாலாவது மரத்தினாலாவது உலோகத்தினாலாவது அஸ்திரத்தினாலாவது நான் இந்திரனால் கொல்ல முடியாதவனாக இருக்க வேண்டும். பகலிலாவது இரவிலாவது எனக்கு இந்திரனால் மரணம் உண்டாகாமல் நீங்கள் ஆசீர்வதிக்கவேண்டும்" என்றான்.

"அப்படியே!" என்றார்கள் தேவரிஷிகள்.

விருத்திரன் பயந்தது சரியே. இந்திரன் விருத்திரனிடம் உண்மையாக நட்பு கொள்ளவில்லை. அவனைக் கொல்லச் சமயம் பார்த்த வண்ணமாகவே இருந்தான். ஒரு நாள் சாயங்காலம் கடற்கரையில் விருத்திரனைச் சந்தித்தான். இது அசுரனை வஞ்சித்துக் கொல்லும் சமயம்; இது பகலுமில்லை இரவுமில்லை என்று யுத்தம் துவக்கினான். அப்போது விருத்திரன் "ஹே! அதமனே! வீண் போகாத வச்சிராயுதத்தை ஏன் பிரயோகிக்காமலிருக்கிறாய்? ஹரியின் தேஜஸினால் பிரவேசிக்கப்பட்டிருக்கும் உன்னுடைய ஆயுதத்தை என் மேல் செலுத்து; நான் நற்கதியை அடைவேன்" என்று திருமாலை ஸ்தோத்திரம் செய்து பஜித்தான்.

இந்திரன் விருத்திரனுடைய வலது கையை வெட்டினான். விருத்திரன் அதற்குச் சலியாமல் தன் இடது கையால் இரும்பு உலக்கையை வீசி இந்திரனைத் தாக்கினான். இடது கையையும் இந்திரன் வெட்டினான். இரண்டு கைகளும் இழந்த விருத்திரன் வாயைத் திறந்து இந்திரனை விழுங்கிவிட்டான். "ஐயோ!" என்றார்கள் தேவர்கள்.

ஆனால் இந்திரன் சாகவில்லை. விருத்திரனுடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து பக்கத்திலிருந்த கடற்கரை நுரையில் வச்சிராயுதத்தைப் பிரவேசிக்கச் செய்து அந்த நுரையை விருத்திரன் மேல் பிரயோகித்தான். அப்போது மகாவிஷ்ணு அந்த நுரையில் புகுந்தார். விருத்திரன் மாண்டான்.





இடைவிடாத யுத்தத்தால் மிகவும் பிடிக்கப்பட்ட உலகம் உடனே சந்தோஷம் அடைந்தது. ஆனால் இந்திரன் பிரம்ம ஹத்தி தோஷத்தினாலும் சத்தியம் தவறியதாலும் அவமானம் அடைந்து ஒளியிழந்து வெட்கத்தில் மூழ்கி யாருடைய கண்ணுக்கும் காணப்படாமல் மறைந்து கொண்டான்!

• • •

அரசன் இல்லாமல் மக்கள் வாழ முடியாது. அரசன் என்றால் அரசு செலுத்தும் தனி மனிதனோ குலமோ சபையோ ஏதேனு மொன்று. இந்த இயற்கை நியதிப்படி இந்திரன் மறைந்ததும் தேவர்களும் ரிஷிகளும் மிக்க வருத்தப் பட்டார்கள்.

பிறகு பராக்கிரமமும் புகழும் சீலமும் பொருந்திய நஹுஷ ராஜனிடம் ரிஷிகளும் தேவர்களும் சென்று "தேவ ராஜ்ய பட்டாபிஷேகம் பெற்று நீ எங்களுக்கு இந்திரனாக இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

"நான் அசக்தன். உங்களை என்னால் எவ்வாறு காப்பாற்ற முடியும்? இந்திரன் எங்கே, நான் எங்கே?" என்று நஹுஷன் அவனுக்கு இயற்கையான அடக்கத்துடன் மறுத்தான்.

"எங்களுடைய தவத்தின் பயனை எல்லாம் நீ அடைவாய். தயங்காமல் அபிஷேகம் செய்துகொள். உன்னுடைய கண்களுக்குப்பட்ட யாவருடைய தேஜஸும் உன்னை அடையும். இதனால் நீ பலவானாவாய். சுவர்க்கத்தில் தேவராஜனாக இருக்கக் கடவாய்" என்று வற்புறுத்திச் சம்மதிக்கச் செய்தார்கள்.

• • •

புரட்சி என்பது புதிதல்ல. தேவலோகத்திலும் புரட்சி நடந்ததாக இந்தக் கதை புராணத்தில் எழுதப்பட்டிருக்கிறது. தேவர்கள் இந்திரனை நீக்கிவிட்டு நஹுஷனை தேவராஜாவாகச் செய்தார்கள். பிறகு நஹுஷன் எவ்வாறு நாசமடைந்தான் என்கிற கதையும் கேட்க வேண்டிய கதை.

# தேவை

சென்னையிலுள்ள இந்தியா கவர்ன்மெண்ட் பப்ளிக் இன்பர்மேஷன் ப்யூரோவில் தாற்காலிகமான தமிழ் உதவி ஜர்னலிஸ்ட் ஸ்தானத்துக்கும் தமிழ் டைப்பிஸ்ட் ஸ்தானங்களுக்கும் ப்ரிட்டிஷ் பிரஜைகளிடமிருந்து விண்ணப்பங்கள் கோரப்படுகின்றன. இந்த ஸ்தானங்கள் யுத்த முடிவு வரை இருக்கக் கூடும்.

உதவி ஜர்னலிஸ்ட்: வயது 21-35. சம்பளம் 150-5-200. நல்ல கல்லூரிப் பயிற்சியும் பத்திரிகை அனுபவமும் அத்தியாவசியம். ஏதேனும் ஒரு தமிழ்த் தினசரிப் பத்திரிகை ஆபீஸில் குறைந்தது 12 மாத காலம் சேர்ந்தாற் போல் வேலை செய்து அனுபவப் பட்டவர்களுக்கு முதன்மை கொடுக்கப்படும். ஆங்கிலத்திலிருந்து தமிழிலும் தமிழிலிருந்து ஆங்கிலத்திலும் மொழிபெயர்ப்பதில் நல்ல திறமை அத்தியாவசியம். விண்ணப்பதாரர்கள் நற்சாக்ஷிப் பத்திரங்களின் நகல்களுடன், பிரசுரமான கட்டுரைகளின் பிரதிகளை, சாத்தியமான இடங்களில் கையெடுத்திட்டு, அனுப்ப வேண்டும். விண்ணப்பங்கள் ஆங்கிலத்தில் இருக்க வேண்டும்.

டைப்பிஸ்டுகள்: வயது 18-35. சம்பளம் ரூ. 60-2-80-5-120 விண்ணப்பதாரர்கள் மெட்ரிகுலேஷன் அல்லது அதற்குச் சமமான பரீக்ஷையில் தேறியவர்களாகவும், திருத்தமாயும் துரிதமாயும் தமிழில் டைப்படிக்கக் கூடியவர்களாகவும் இருக்க வேண்டும். ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கும் சக்தியும் நல்ல கையெழுத்தும் அத்தியாவசியம். பத்திரிகை அனுபவமுள்ளவர்களுக்கு முதன்மை கொடுக்கப்படும். விண்ணப்பதாரர்கள், நற்சாக்ஷிப் பத்திரங்களின் நகல்களுடன், பத்திரிகைப் பயிற்சியையும் இதர யோக்யதாம்சங்களையும் பற்றிய விவரங்களை அனுப்ப வேண்டும். விண்ணப்பங்கள் தமிழில் தத்தம் கையெழுத்தில் இருக்க வேண்டும்.

சென்னையில், தேர்ந்தெடுக்கும் கமிட்டியார் முன் அவரவர் செலவில் பரீக்ஷைக்கும் பேட்டிக்கும் ஹாஜராகும்படிச் சில பேர் அழைக்கப்படுவார்கள். விண்ணப்பங்கள், பிரின்சிபல் இன்பர்மேஷன் ஆபீஸர், ப்யூரோ ஆப் பப்ளிக் இன்பர்மேஷன், கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா, 7, வுட்ஸ் ரோட், சென்னை என்ற விலாசத்துக்கு 1945 மார்ச் 9உக்குள் வந்து சேர வேண்டும்.

# இதய ஒளி

ஸி. ஆர். ஆர். மணி

டெலிபோன் மணிச் சத்தம் கேட்டு, ஏதோ குறிப்புகள் தயாரிப்பதில் தீவிரமாய் மூழ்கியிருந்த சதாசிவம் எரிச்சலுடன் அதைப் பார்த்தார். "சரிதான்! இன்றைக்கு வேலை ஒன்றும் நடக்கப் போகிறதில்லை" என்று முணுமுணுத்துக் கொண்டே அந்தக் குறிப்புக் காகிதங்களையெல்லாம் தூக்கி மேஜையின் ஒரு மூலையில் எறிந்துவிட்டு, ரிஸீவரைக் கையிலெடுத்தார்.

"ஹலோ! யார் பேசுகிறது?...... கோமதியா? இப்போ என்ன அவ்வளவு அவசரம்?"

டெலிபோனில் பேசியது அவருடைய மனைவி கோமதிதான்.

"ஊரிலிருந்து அப்பாவும் அம்மாவும் வந்திருக்கிறார்கள். இன்று மாலை நாலரை மணி வண்டிக்கே மறுபடியும் புறப்படப் போகிறார்களாம்."

"சரி, அவ்வளவு அவசரமான வேலையாய் இருந்தால் நான் ஒன்றும் குறுக்கே நிற்க மாட்டேன்."

"இன்றைக்கு நல்ல நாளாய் இருக்கிறதாம். சமீபத்தில் நல்ல நாள் ஒன்றும் கிடையாதாம். அதனால்......"

"அதனால் என்ன?"

"என்னையும் அழைத்துக்கொண்டு..."

"உனக்கென்ன வந்தது இப்போது?"

"உங்களுக்கு அதெல்லாம் என் ஞாபகம் இருக்கப் போகிறது? நான் ... ஸ்நானம் பண்ணி ...... ஆறு மாசம் ஆகப் போகிறதே!" என்று வெட்கம் நிறைந்த குரலில் பதில் வந்தது.

சதாசிவத்தின் முகத்தில் இலேசான புன்சிரிப்புத் தவழ்ந்திருக்கும் என்று நேயர்கள் ஊகித்துக் கொண்டால் அந்த ஊகம் சரியல்ல என்று சொல்ல நான் கடமைப்பட்டிருக்கிறேன். அதற்கு மாறாக அவர் ஏதோ யோசனை செய்யலானார். சென்ற ஒரு மாத காலமாய்த் தமக்கும் மாமனாருக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துகள் அவரது ஞாபகத்துக்கு வந்தன.

"சரி, போய்விட்டு வா. எனக்காக நீங்கள் காத்திருக்க வேண்டாம். எனக்கு வேலை நிறைய இருக்கிறது. நேரே ஸ்டேஷனுக்கு வந்து பார்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு ரிஸீவரைக் கீழே வைத்தார்.

## 2

சிறு வயதிலேயே தாயாரை இழந்த சதாசிவம் முழுக்க முழுக்க 'அப்பா பிள்ளை'யாகவே வளர்ந்தான்.

அவன் தகப்பனார், நடராஜன் எம்.ஏ., பி.எல். அக்காலத்தியப் பொருளாதார உலகில் முக்கியமானவர்களில் ஒருவர். கண்டிப்பானபேர்வழி. எந்த விஷயத்தையும் ஒரு திட்டப்படியே செய்து அதன் பலாபலன்களையும் திட்டப்படியே அனுபவித்து வாழ்ந்தவர். வாழ்க்கையின் சின்னஞ்சிறு அம்சத்திலிருந்து மகத்தான நிகழ்ச்சிகள் வரை அவர் இந்தக் கொள்கையை விடாப்பிடியாகப் பிடித்துத் தன் காலமெல்லாம் கழித்தார்.

அப்பாவினுடைய, இப்படிப்பட்ட கொள்கையிலேயே தோய்ந்து ஊறி வளர்ந்த சதாசிவம் அனேக விஷயங்களில் அவரை ஒத்திருந்ததில் ஆச்சரியமில்லை.

நடராஜன் தன் திட்டப்படியே அவனை வளர்த்து, தன் செல்வாக்கினால் பிரபல பாங்கர்களான மோகன்ராய்—கேசவராய் ஸ்தாபனத்தில் அவனை அமர்த்தினார். அகத்தில் அடக்கமும் முகத்தில் அழகும் பொருந்திய கோமதியைக் கல்யாணம் செய்து வைத்தார். அவன் வந்த அதிர்ஷ்டமோ, அல்லது சதாசிவத்தின் திறமையோ, வேறு என்ன காரணமோ,—சதாசிவம் வேலையில் நல்ல பெயர் வாங்கிக் கிளைக் காரியாலயக்

கனியொன்றில் மானேஜராகி, மாதம் ரூ. 200 சம்பாதிக்கும் நிலைமை யடைந்தான்.

நடராஜனின் வாழ்க்கைத் திட்டங்களெல்லாம் அனேகமாய் முடிவடைந்து போனதனாலேயோ என்னவோ, அவர் இவ்வுலகிலிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

பெரிய மனிதர்களின் ஜாபிதாவில் சேர்த்துகொண்ட சதாசிவத்தை, நாம் 'அவன், இவன்' என்று மரியாதைக் குறைவாய்க் குறிப்பிடாமல், 'அவர், இவர்' என்று குறிப்பிடுவோமே! பெரிய இடத்துப் பொல்லாப்பு நமக்கெதற்கு?

## 3

மேற்கு வானத்தில் ஒரே ஒரு நட்சத்திரம் மட்டும் தோன்றியிருந்தது. கிணற்றுக்குப் பக்கத்திலுள்ள மேடைமேல் உட்கார்ந்து கொண்டு கோமதி அந்த நட்சத்திரத்தை எறிட்டுப் பார்த்தாள். வெளிச்சம் மங்கிக்கொண்டு வந்ததே தவிர நன்றாய் இருட்டவில்லை.

இரண்டு, மூன்று விநாடிகள் அந்த நட்சத்திரத்தைப் பார்த்தாள். பிறகு, தன் பக்கத்திலிருந்த வேப்பமரத்தைப் பார்த்தாள்; கிணற்றைப் பார்த்தாள்; மறுபடி வேப்ப மரம்; நட்சத்திரம்!

இதெல்லாம் சேர்ந்து, அவள் மனதிலுள்ள பழைய சம்பவங்களைக் கட்டாயம் கிளறி விருக்க வேண்டுமல்லவா?

இரண்டு வருஷங்களுக்கு முன், அவள் கணவன் வீட்டிற்குப் போவதற்கு முதல் நாள் மாலை, கிணற்றங்கரையின் அமைதியையும் வேப்ப மரத்தின் ஆரோக்கியமான காற்றையும் அனுபவிப்பதற்காக வந்திருந்தாள். அப்போது அவள் மனதில் ஆனந்தம் நிரம்பியிருந்தது. குதூகலத்தோடு தன்னைச் சுற்றிப் பார்த்தபோது அந்த நட்சத்திரம் என்னவெல்லாமோ ஜாலவித்தை செய்து அவளை மயக்கிற்று. என்னென்னவோ இன்பக்கதைகள் சொல்லிற்று. வேப்பமரத்து 'சல சலப்பு'க்கூட அன்று ஒரு பிரேம கீதமாய்க் காதில் விழுந்தது.

அதற்கப்புறம் இரண்டு வருஷங்கள் ஓடி விட்டன. மறுபடி அதே நட்சத்திரம், அதே வேப்பமரம், அதே அமைதி. ஆனால் இப்போது அந்த நட்சத்திரம் இன்பக் கதைகள் சொல்லவில்லை, வேப்ப மரம்



பிரேம கீதம் பாடவில்லை; அந்த அமைதி நிம்மதியைக் கொடுக்கவில்லை; குலைந்தது.

வாழ்க்கை, மனைவி, அன்பு முதலிய விஷயங்களைப் பற்றி யோசிப்பதற்குக்கூட நேரமில்லாதபடி சதாசிவத்தின் மனம் பாங்க் வேலையிலேயே ஈடுபட்டிருந்தது. அனேகமாய், தினந்தோறும் இரவு பதினொரு மணி வரையில் விழித்துக் கொண்டு ஏதாவது கணக்குப் புஸ்தகங்களைப் புரட்டிக் கொண்டிருப்பார். அல்லது பாங்கியின் வியாபார விஸ்தரிப்புக்காகத் திட்டம் போட்டுக் கொண்டிருப்பார். ஆரம்பத்தில் ஒரு நாள் கோமதி, "இப்படியெல்லாம் வேலை செய்வதற்கு உங்கள் ஆபீஸ் மானேஜர் ஒருவர்தானா அகப்பட்டார்? உடம்பு என்னத்திற்காகும்?" என்று கேட்டாள். அவர் முகம் சுண்டியது. அவளை அலட்சியமாய்ப் பார்த்து, "உனக்குச் சம்பந்த மில்லாத விஷயங்களில் தலையிட வேண்டியதில்லை. என் ஆபீஸ் விஷயங்களைக் கவனிக்கக் கூட உன் உத்தரவு வேண்டுமோ? உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ!" என்றார். கோமதியின் இதயம் புண்பட்டுப் போயிற்று. அவர் உடம்பு கெடுவதும், வியாதியால் கஷ்டப் படுவதும் அவளுக்குச் சம்பந்த மில்லாத விஷயங்களா?



மனோ வேதனையின் பாரம் அவனை அழுத்த, இரண்டு வருஷங்களுக்குமுன் இன்பக் கதைகள் சொன்ன அதே நக்ஷத்திரம் இன்று கேலி செய்ய, கிணற்றுக்குப் பக்கத்திலிருந்த மேடைமேல் தனியாக உட்கார்ந்திருந்தான். இத்தனை பெரிய உலகத்தில் தன் மனோவேதனையைத் தணிப்பதற்கு யாருமில்லை—யாராலும் முடியாது—என்பதை நினைத்தபோது அவன் கண்களில் நீர் ததும்பியது.

௨

கோமதி பிறந்தகம் சென்று விட்டதனால் சதாசிவத்தின் எந்த வேலைக்கும் குந்தகம் ஏற்பட்டு விடவில்லை. அவருடைய பாக்கி அலுவல்களெல்லாம் வழக்கம் போலவே நடந்து வந்தன. வீட்டில் ராத்திரி பன்னிரண்டு மணி வரையில் விழித்துக் கொண்டு வேலை செய்தாலும் கூட யாரும் முணுமுணுக்கவோ, நச்சரிக்கவோ போவதில்லை.

கொஞ்சம் நாட்கள் ஆன பிறகு அவருக்குச் சில சமயங்களில் கோமதியின் ஞாபகம் வருவதுண்டு — அதாவது, அவளுடைய கடிதங்களைப் படிக்கும்போது. அப்போது அவளை நினைத்துப் பச்சாத்தாபப்படுவார்.

அவள் கடிதங்களுக்குப் பதில் எழுதுவதில் மாத்திரம் அவர் ரொம்பக் கணக்காக இருந்தார். "இங்கே நான் சௌக்கியம். அங்கே நீ சௌக்கியமா?" என்ற தோரணையில்தான் இருக்கும் அவர் கடிதங்களெல்லாம். என்ன தான் இருந்தாலும் அவளுடைய ஒவ்வொரு கடிதத்திற்கும் உடனுக்குடன் பதில் போய்ச் சேர்ந்துவிடும். அது உத்தியோகம் கற்றுக் கொடுத்த பழக்கமாயிருக்கலாம்!

சதாசிவத்தின் வாழ்க்கையிலேயே கிளர்ச்சியுண்டு பண்ணின சம்பவம் ஒன்று நடந்தது. ஒரு நாள் காலை ஆபீஸுக்கு ரொம்ப அவசரத்துடன் போய்க் கொண்டிருந்தபோது, டயர் மாட்டு லாடத்தின் மேல் ஏறிக் கிழிந்து விட்டது. வேகமாய் வந்து கொண்டிருந்த வண்டி சாலையின் இடது பக்கம் திடீரென்று திரும்பி அங்கிருந்த விளக்குக் கம்பத்தில் மோதாமல் மயிரிழை தப்பி, பயங்கரமாய்க் கத்திக் கொண்டே ஒரு உலுக்கு உலுக்கிவிட்டு நின்றது. விளக்குக் கம்பத்தின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒரு பெண் மின்னலைப் போலப் பாய்ந்து எமன் வாயிலிருந்து தப்பினாள். சதாசிவம் அவசரமாய்க் கீழே குதித்துப் பார்த்தார். அந்தப் பெண் மின்னலைப் போலப் பாய்ந்தாளே யொழிய அதைப் போல் மறைந்து விடவில்லை. ஆனால் அவள் தேகம் மட்டும் அதிர்ச்சியினால் நடுங்கிக் கொண்டிருந்தது.

சதாசிவம், "மன்னிக்கவேண்டும்; ஏதாவது அடிபட்டதோ?" என்று கேட்டார். அந்தப் பெண் புன்னகை புரிந்தாள். "வண்டி எங்கே குடை சாய்ந்து விடப் போகிறதோ என்று பயந்தேன். நல்லவேளையாக ஒன்றும் நேரவில்லை" என்று சொல்லும்போதே அவள் குரலில் ஏற்பட்டிருந்த நடுக்கத்தைக் கண்டுகொண்டார்.

பிறகு ஓர் டாக்ஸி அமர்த்திக் கொண்டு அவளை அவள் வீட்டிற்குக் கொண்டு போய் விட்டு விட்டு, ஆபீஸிற்குச் சென்றார்.

இப்படியாகச் சதாசிவத்திற்கும் திவான் பகதூர் கனகராஜனின் பெண் மீனாக்ஷிக்கும் பரிச்சயம் ஏற்பட்டது.

கனகராஜன் ரொம்ப நாகரிகமான மனிதர். ஆகவே, சதாசிவம் மீனாக்ஷியுடன் பழகுவதை அவர் ஆட்சேபிக்கவில்லை. தவிர, அவருக்குத் தன் பெண்ணின்மேல் அபார நம்பிக்கை—அவள் நெறி தவறிப் போக மாட்டாளென்று. இன்னொரு விஷயம். சதாசிவம் கலியாணமானவர் என்று அவருக்காவது மீனாக்ஷிக்காவது தெரியாது.

இப்போதெல்லாம் சதாசிவத்தால் முன் மாதிரி ஒரே குறியுடன் வேலை செய்ய முடியவில்லை. அடிக்கடி மீனாக்ஷியின் அழகான முகம் அவர் மனக்கண்முன் தோன்றித் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்தது. இந்தத் தொந்தரவை அவர் மனப்பூர்வமாய் வரவேற்றார்.

மாலை நேரங்களில் நேரம் போவதே தெரியாமல் மீனாக்ஷியும் சதாசிவமும் ஏதாவது பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் சம்பாஷணையில் காதல்தான் பிரதான அம்சமாயிருக்கும்.

ஒரு நாள், "எனக்கு இந்தப் பெண் ஜன்மமே பிடிக்கவில்லை. குயிலாகப் பிறந்து ஆனந்தமாய்ப் பறந்து திரிய வேணுமென்று ஆசையாய் இருக்கிறது!" என்றாள் மீனாக்ஷி.

"நன்றாயிருக்கிறது! குயில் பாடத்தான் செய்யும்; இவ்வளவு அழகாகப் பேசுமா?" என்று கொஞ்சம் புத்திசாலித்தனமாகவே பதில் சொன்னார் சதாசிவம்.

"ஏன்? நீங்களும் குயிலாக மாறிவிட்டால் அப்புறம் நமக்குள் பாஷை வேற்றுமை யிருக்காதல்லவா? பாஷை வேற்றுமை மாத்திரந்தானா இருக்காது? எந்தவிதமான வேற்றுமையும் இருக்காது. அப்புறம் நானும் நீங்களும் ......" என்று மீனாக்ஷி சொல்லுவதற்குள் சதாசிவம் இடைமறித்து, "அதெல்லாம் எனக்கு வேண்டாம். எங்கள் பாங்கிற்குப் புதிதாய் விஸ்தரிப்புத் திட்டம் போட்டிருக்கிறேன். அதன்படி எல்லாம் நடந்தால் எங்கள் வியாபாரம் இரண்டு மடங்காகும். அப்புறம் லண்டனில் கூட ஓர் காரியாலயம் ஆரம்பித்து நடத்துவதற்கு வேண்டிய செல்வாக்கு ஏற்படும். இதையெல்லாம் விட்டு விட்டுக் குயிலாகவும் கிளியாகவும் பிறந்து என்ன வாழ்க்கை வேண்டிக் கிடக்கிறது" என்று பிரமாதமாய்ப் பேசி முடித்தார்.

மீனாக்ஷி யோசனையில் ஆழ்ந்து போனாள். சதாசிவத்தைப் பற்றித் தான் முன்பு கொண்டிருந்த அபிப்பிராயங்கள் எவ்வளவு தவறு என்று அறிந்து கொண்டாள்.

சதாசிவத்தின் அறியாமை காரணமாகவே அவரிடம் அவளுக்கிருந்த பற்றுதல் இன்னும் அதிகமாயிற்று. அந்த அறியாமையைப் போக்க வேண்டியது தன் கடமை, அது தன்னால் முடியும் என்றும் அவள் நம்பினாள். பெண்களின் மனோதத்துவத்தை அவருக்குப் புரியும்படி எடுத்துச் சொன்னாள். அந்தச் சின்னப் பெண்ணிற்கு இவ்வளவு விஷயங்கள் தெரியுமா என்று சதாசிவம் ஆச்சரியப்பட்டார். அவள் சொன்ன விஷயங்களையெல்லாம் பற்றி யோசிக்கவும் தலைப்பட்டார்

அவர் சிந்தனையின் உத்வேகம் அதிகமாக அதிகமாக இன்னதென்று விளங்காத ஒரு குறையை — பல ஹீனத்தை — தன் இதய அரங்கத்தில் வைத்திருப்பதாய் உணரலானார். யாரையோ நினைத்துப் பச்சாத்தாபப்படுவது போல் உணர்ந்தார்.

## 5

மணி பத்து; வெளியே ஒரே இருட்டு. அமாவாசைக்கு இன்னும் இரண்டு நாட்கள் இருந்தன. வானத்தில் நட்சத்திரங்கள் சிதறிக் கிடந்தன.

மிகவும் இறுக்கமாக இருந்ததால் சதாசிவம் ஜன்னலோரமாய்ச் சாய்வு நாற்காலியைப் போட்டுக் கொண்டு சாய்ந்து கொண்டிருந்தார். அவர் கையில் அன்று வந்த கோமதியின் கடிதம் காணப்பட்டது. அதை அவர் முன்னமேயே ஒருதரம் படித்திருந்தும், இன்னுமொரு தரம் படிக்க வேண்டுமென்று ஏனோ தோன்றிற்று.

கோமதியின் பிரசவத்திற்கு நாட்கள் நெருங்கிக் கொண்டு வந்தன.

"இன்னும் மூன்று, நான்கு நாட்கள் கூடத் தங்காது என்று டாக்டர் தங்கமணி சொல்லுகிறாள். என்னை யறியாமலேயே என் மனதில் ஏதோ ஒரு பயம் புகுந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் உங்களைப் பற்றியே இரவும் பகலும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். வேறு ஆதரவு என்ன இருக்கிறது பெண்ணாய்ப் பிறந்த எனக்கு?"

இதற்கு மேல் சதாசிவத்தால் படிக்க முடியவில்லை. மனதில் என்னவோ உறுத்திக் கொண்டிருந்தது. சற்று நேரம் என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டிருந்து விட்டு மறுபடியும் கடிதத்தை எடுத்துப் படிக்கலானார்:

"உங்களிடம் ஒரு வரம் கேட்கிறேன். மிகவும் மன்றாடிக் கேட்கிறேன். உங்களைப் பார்க்க வேண்டும்போல் இருக்கிறது. எனக்கு என்ன நேர்ந்தாலும் உங்கள் தரிசனம் கிடைத்த பிறகு நேரட்டும் என்று பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து இந்த ஒரு வரத்தை மட்டும் அடியாளுக்கு அளிக்க வேண்டும். என்னால் உங்களுக்கு எத்தனையோ தொல்லைகள் ஏற்பட்டிருக்கின்றன. இருந்தாலும் இந்தத் தொல்லையை மாத்திரம் பெரிய மனது பண்ணி ஏற்றுக்கொள்ள வேண்டும். நான் பயப்படுகிற விதம் நடந்து விட்டால் இதுதான் நான் உங்களுக்குக் கொடுக்கும் கடைசித் தொல்லையாக இருக்கும்......"

சதாசிவத்தின் கண்களைக் கண்ணீர் மறைத்தது. உள்ளம் நெகிழ, சிறு குழந்தையைப் போல் தேம்பினார் அவர். பிறகு எழுந்து அறைக்கு வெளியே விருந்தாழ்வாரத்தில் நின்று கொண்டு விண்மீன்கள் நிறைந்திருந்த ஆகாயத்தைப் பார்த்தார். கீழே பார்த்தார். தோட்டக்கார ராமனும் அவனுக்கு விருந்தாளியாக வந்திருந்த அவன் மாமனும் உட்கார்ந்து கொண்டு பேசிக்கொண்டிருந்தது அவர்கள் குரல்களினின்றும் தெரிய வந்தது.

"ஏண்டா, ராமா! சம்பகம் ஊருக்குப் போய் ரொம்ப நாளாச்சுதோ?" என்றான் மாமன்.

சம்பகம் ராமனுடைய மனைவி.

"உம், ஆச்சுதே! இந்தச் சித்திரை பனி ரெண்டுக்கு நாலுமாச மாகிறதே! எனக்கு என்னவோ வருஷக் கணக்கிலே ஆனாப்பலே தோணுது, மாமா!" என்றான் ராமன்.

"நீ போய்ப் பார்க்கவே யில்லையா?"

"அப்போ கொளந்தே பொறந்ததும் போனதுதான். அப்புறம் போகவே யில்லே. எனக்கு வரவரப் பைத்தியம் பிடிச்சுடும்னு தோணுது, மாமா! வீட்டிலே பொம்பிளே யில்லாட்டி வீடு வீடாவாத் தோணுது? ஐயா கிட்டே ஒரு நாலு நாள் ரஜா வாங்கிக் கிட்டுப் போய்க் கூட்டிக்கிட்டு வந்துடப் போறேன். காலைக்குத்தான் ஐயாவைக் கேக்கணும்."

"ஏழை ராமனுடைய மனதில் இருக்கும் அன்பு கூட என் மனதில் இல்லையே!" என்று நினைத்துக் கொண்டார் சதாசிவம். தன்னையே நிந்தித்துக் கொண்டு மறுபடி-



மனைவி :— யாரையோ கூட அழைத்துக் கொண்டு வருகிறீர்களே, அவர் யார்?

கணவன் :—யாரென்று எனக்குத் தெரியாது. பஸ்ஸிலிருந்து என் பின்னாலேயே பேப்பரைப் படித்துக் கொண்டு வருகிறார்.

மனைவி :—அது சரி, பேப்பர் யாருடையது?

கணவன் :—பேப்பர் அவருடையதுதான்!

---

யும் சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு, ஏதோ முடிவுக்கு வந்தவர்போல் உள்ளே வந்து விளக்கை அணைத்து விட்டுப் படுத்தார்.

## 6

கணவன் தான் கேட்ட வரத்தை அவ்வளவு சீக்கிரத்தில் அளிப்பார் என்று கோமதி எதிர்பார்க்கவில்லை.

அவள் ரொம்பப் பலஹீனமாய்க் காணப்பட்டாள். அவள் கண்களிலுள்ள அந்தத் தாபம் நிறைந்த பார்வை யொன்றே சதாசிவத்தைத் துளைத்தது. "கோமதி!" என்று ஒரே வார்த்தைதான் அவரால் பேச முடிந்தது. ஆனால் அந்த ஒரு வார்த்தையிலேயே அவர் உணர்ச்சி பூராவும் திணிக்கப்பட்டிருந்தது.

கீழே விழுந்த குழந்தையை, "விழுந்தாயா, குழந்தை! ஐயோ, பாவம்!" என்று யாராவது பரிதாபத்துடன் கேட்டபிறகு தான் குழந்தைக்கு அழுகை அதிகமாகிறது. இதேமாதிரிதான் கோமதியும் தன் கணவன் வாயிலிருந்து உணர்ச்சி நிறைந்த ஒரு வார்த்தையைக் கேட்டவுடன் துக்கம் கரைபுரண்டு போய்க் கணவனின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினாள். சதாசிவத்திற்கும் கண்ணீர் விடுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. அந்தத் துன்பத்தின் மத்தியிலேதான் வாழ்க்-

கையின் மகத்தான இன்பத்தையும் அவன் உள்ளம் எட்டிப் பார்த்தது.

கோமதிக்கு நோவு கண்டுவிட்டது. சதாசிவத்தின் மனம் ஒரே குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. அவர் அனுபவிப்பது இன்பமா துன்பமா என்றுகூட அவருக்குத் தெரியவில்லை.

திடீரென்று கோமதி இருந்த அறையிலிருந்து 'குவா, குவா' என்று வீணா நாதம் போன்ற சின்னஞ்சிறு குரல் அவரை ஏதோ ஒரு உலகத்திற்கு அழைத்துச் சென்றது. தேகம் முழுவதும் அவருக்கு மயிர்க்கூச்சல் உண்டாயிற்று.

“பெண் குழந்தை!” என்று கோமதியின் தாயார் சொல்லிக் கொண்டே உள்ளே யிருந்து ஓடி வந்தாள். மாப்பிள்ளை சிலை போல் ஒரே பார்வையுடன் நிற்பதைக் கண்டு அவள் சற்று பயந்தே போனாள்.

கடைசியில், சதாசிவத்தைப் பார்க்க விரும்புவதாகக் கோமதி சொல்லி யனுப்பினாள். சதாசிவம் உள்ளே நுழைந்தார். கோமதியின் சின்னஞ்சிறு பிம்பம் போலிருந்தது குழந்தை. கோமதி ஏதோ பெரிய காரியத்தைச் சாதித்துவிட்ட பெருமை தோன்ற, “உங்கள் குழந்தையைப் பார்த்தீர்களா?” என்றாள் மெதுவாக. அப்போது அவள் முகத்தில் படர்ந்திருந்த பரிபூரணப் பொலிவு அவர் நெஞ்சை என்னவோ செய்தது. தடுமாறிய குரலில், “கோமதி, என் கண்ணே!” என்றார். அவர் மார்பு விம்மி விம்மி அடங்கிற்று.

அன்று இரவே அவள் உடல்நிலை மோசமாகிவிட்டது. நாடி மிகவும் பலஹீனமாகி வந்தது. அந்த வீட்டிலுள்ளவர்களுக்கு உலகம் இருண்டு தோன்றியது. அடுத்த நாள் அமாவாசை வேறு அவர்களைப் பயமுறுத்தலாயிற்று.

அந்த இரவில் சதாசிவம் அசைவற்றுத் தூங்கிக் கொண்டிருந்தார்!

‘டங், டங்’ என்று மணி இரண்டு அடித்தது. அவர் நெற்றியில் ‘ஜில்’லென்று உணர்ச்சி பட்டுக் கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்! கோமதி அவர் பக்கத்தில் நின்றுகொண்டு அவரைப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

“கோமதி! என்ன இது? எப்படி நீ எழுந்து வந்தாய்?” என்று கேட்டார் அவர்.

“உங்கள் மனசை மூடியிருந்த திரை தான் விலகிப் போய்விட்டதே. இனிமேல் எனக்கு எதுவும் லக்ஷ்யமில்லை” என்றாள்.

“கோமதி, உனக்கு என்ன பயித்தியமா? போய்ப் படுத்துக் கொள். நான் கொண்டு போய் விடுகிறேன் வா” என்றார்.

கோமதி ஒரு மாதிரியாகச் சிரித்தாள்.

“உங்களால் அது முடியாது; என்னாலும் முடியாது. ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போய் விடுகிறேன். உங்கள் மனசில் இப்போதுதான் வெளிச்சம் ஏற்பட்டிருக்கிறது. இனிமேல் என்னை நீங்கள் மறக்க முடியாது. அது ஒன்றே எனக்குப் போதும்” என்று சொல்லிக் கொண்டே காற்றில் மிதப்பவள் போல் விலகிச் சென்று மறைந்தாள்.

சதாசிவம் அவளைப் பிடிக்க எழுந்தார். கால்கள் நிலத்தில் பாவவில்லை. சுழன்று சுழன்று எங்கேயோ போய் விழுந்தார்.

சதாசிவம் கண்களைத் திறந்தபோது கட்டிலிலிருந்து கீழே விழுந்திருந்தார். தேகமெல்லாம் வியர்வை வெள்ளமாய் இருந்தது.

அதே சமயம் மாமனார் உள்ளே வந்து, “மாப்பிள்ளை, கோமதி மோசம் செய்து விட்டாள். யாருக்குமே தெரியாமல் போய் விட்டாளே!” என்று அலறினார்.

சதாசிவம் மெதுவாக, “இல்லை, மாமா! இல்லை; என்னிடம் சொல்லி விட்டுத்தான் போனாள்” என்றார்!

## ஒரு திருத்தம்

21-1-1945 கல்கி இதழில் பிரசுரமான இந்திய சர்க்கார் பரிசுப் பத்திரப் போட்டி முடிவு விளம்பரத்தில் **A K.** வரிசை 5-வது வரியில் நெ. 046188 என்று பிரசுரித்திருப்பது தவறுகையால் அதை 046168 என வாசிக்கவும்.

அவர் கண்களிலிருந்து துளிக் கண்ணீர் கூட வரவில்லை!

## 7

பத்து வருஷங்களுக்கப்புறம் ஒரு நாள் பிரசித்தி பெற்ற ஸ்திரீ வித்தியாலயத்தின் ஓர் அறையில் இரண்டு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களில் ஒருவர் வித்தியாலயத் தலைவி ஸ்ரீமதி மீனாக்ஷி; இன்னொருவர் பத்து வருஷங்களுக்கு முன் பொருளாதார உலகிலிருந்து திடீரென்று விலகிக் கொண்ட ஸ்ரீ சதாசிவம்.

மீனாக்ஷி சொல்லிக்கொண்டிருந்தாள்: "பெண்களுக்குப் படிப்பு வேண்டியதில்லையென்றும் குடித்தனம் நடத்துவதற்குத் தெரிந்தால் போதுமென்றும் சொல்லுகிறார்கள். ஆண் பிள்ளைகளுக்கு மட்டும் குடும்பத்தை நடத்துவதற்குத் தெரிய வேண்டாமா? படிப்பும் நல்ல சம்பாத்யமும் இருந்தால் போதுமா? உங்கள் சொந்த அனுபவத்திலிருந்து நீங்கள் புருஷர்களுக்குக் குடும்ப விஷயம் ஒன்றும் தெரிய வேண்டிய அவசிய மில்லை, பெண்களுக்கு மட்டும் தெரிந்திருந்தால் போதும் என்று சொல்வீர்களா?"

சதாசிவம் சற்று நேரம் மௌனமாய் உட்கார்ந்திருந்தார். பிறகு, "மீனாக்ஷி, அதெப்படிச் சொல்ல முடியும்? அந்த உண்மையை மட்டுமா என் அனுபவம் எனக்குப் போதித்தது? அதைவிட மகத்தான இன்னொரு விஷயத்தைக் கூட அல்லவா எனக்குப் போதித்திருக்கிறது? மீனாக்ஷி, நீ என் மனசை மறைத்துக் கொண்டிருந்த திரையைக் கிழித்துப் போட்டாய். உடனே நான் பார்த்தது என் கோமதியின் பரிசுத்தமான மனதை. நீ கொடுத்த சிறு பொறியினால் அவள் என் மனதில் வெளிச்சம் உண்டாக்கினாள். முடிவில் அவள் என்னால் உயிரையே இழந்தாள்; நீயும் என்னால் வாழ்க்கைச் சுகத்தை இழந்தாய். உங்கள் தியாகத்தின் அக்கினி என்னைச் சுட்டெரிக்கிறது. மீனாக்ஷி, நடந்து போன விஷயத்தை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதற்காகவா நான் பிறந்தேன்?" என்று கேட்டு விட்டு நிறுத்தினார். மீனாக்ஷி கண்களில் ததும்பிய நீரைத் துடைத்துக் கொண்டாள்!

# குருவி சொன்ன கதை





மாலு

"சின்னச் சின்ன மிட்டாய்! சிங்கார மிட்டாய்!" என்று கூவிக்கொண்டே தெருவோடு போன மிட்டாய்க்காரனைப் பார்த்ததும், பாலுவுக்கு நாக்கில் ஜலம் ஊறிற்று.

"அம்மா! எனக்கு மிட்டாய் வாங்கிக் கொடு அம்மா!" என்று தன் அம்மாவிடம் பிடிவாதம் பிடித்தான் பாலு.

"அதெல்லாம் உன் உடம்புக்கு ஆகாது! உள்ளே வா! சீடை முறுக்கு எல்லாம் தருகிறேன்" என்றாள் பாலுவின் தாயார்.

பாலு மிட்டாய் வாங்கிக் கொடுத்தால் தான் ஆச்சு என்று ஒரே அழுகையாய் அழ ஆரம்பித்து விட்டான்.

அவன் தாயார் எவ்வளவோ சொல்லியும் பாலு கேட்கவில்லை. கோபத்தில் பாலுவின் முதுகில்



இரண்டு அடி கொடுத்து விட்டு வேகமாக உள்ளே போய் விட்டாள் தாயார்.

பாலு விம்மி விம்மி அழுது கொண்டே தோட்டத்துப் பக்கம் போனான்.

"பாலு!" என்று யாரோ அவனைக் கூப்பிடும் சத்தம் கேட்டது. சுற்று முற்றும் பார்த்தான். ஒரு சிட்டுக் குருவி "நான் தான் உன்னைக் கூப்பிட்டேன்" என்றது.

பாலுவுக்கு ஆச்சரியமாய்ப் போய் விட்டது. குருவி பேசியதைப் பார்த்தால் யாருக்குத்தான் ஆச்சரியமாய் இருக்காது? "நீ பேசக் கற்றுக் கொண்டது எப்படி?" என்று கேட்டான் பாலு.

"முதலில் நீ ஏன் அழுதாய் என்று சொல். பிறகு நான் பேசக் கற்றுக் கொண்டது எப்படி என்பதைப் பற்றிச் சொலகிறேன்" என்றது குருவி.

பாலு நடந்தவற்றை யெல்லாம் சொன்னான்.

அவற்றைக் கேட்ட குருவி, "நீ அழாதே! நான் உனக்கு பேஷான மாம்பழம் தருகிறேன்" என்று சொல்லிவிட்டு, 'விர்' என்று பறந்து சென்று பக்கத்தில் இருந்த மாமரத்திலிருந்து இரண்டு மாம்பழங்களைக் கொண்டு வந்து கொடுத்தது.

பாலு அதைப் பெற்றுக் கொண்டு, "நீ எப்படிப் பேசக் கற்றுக் கொண்டாய்? சொல்லமாட்டாயா?" என்று மறுபடியும் குருவியைக் கேட்டான்.



குருவி தன்னுடைய கதையைச் சொல்ல ஆரம்பித்தது:



நானும் ஒரு காலத்தில் உன்னைப் போல் ஒரு அழகான பையனாகத்தான் இருந்தேன். குருவிகள் எல்லாம் ஒரு நாள் உல்லாசமாகப் போய்க்கொண்டிருந்ததைப் பார்த்தேன். நானும் குருவியாக மாறி அந்தக் கூட்டத்துடன் சந்தோஷமாகப் போகவேண்டும் என்று தோன்றிற்று. இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் போதே அங்கு ஒரு சன்னியாசி வந்தார்.

"தம்பி! நீ சிட்டுக்குருவியாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறாயல்லவா? நல்ல யோசனை. சிட்டுக் குருவிகளுக்குள் ஆண்டான் என்றும் அடிமை என்றும் கிடையாது. அரசு கிடையாது; வரி கிடையாது. சந்தோஷமாகவே இருக்கலாம்!" என்று சொல்லி, என்மீது கொஞ்சம் தண்ணீரைத் தெளித்தார். நான் உடனே சிட்டுக் குருவியாக மாறிவிட்டேன்.

எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அந்தச் சாமியாரைச் சுற்றி வந்து நமஸ்காரம் செய்தேன்.

"உனக்கு இன்னும் என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

"என்னையாவது என் வம்சத்தினரையாவது தொந்தரவு செய்பவர்களைச் சிட்டுக் குருவியாக மாற்ற வரம் தரவேணும்" என்று கேட்டேன்.

"அந்த வரத்தையும் எனக்குக் கொடுத்தார்" என்று குருவி தன் கதையைச் சொல்லி முடித்தது.



பாலுவுக்குக் குருவியின் வார்த்தையில் நம்பிக்கை பிறக்கவில்லை. அதைச் சோதனை செய்து பார்க்க வேண்டும் என்று நினைத்தான். ஆகவே, ஒரு கல்லை எடுத்து அதன் மேல் விட்டெறிந்தான்.

குருவிக்குக் கோபம் வந்துவிட்டது.

"நான் சொல்லியும் நீ என்னைத் துன்புறுத்தியபடியால் நீயும் குருவியாகப் போகக் கடவாய்!" என்று சபித்துவிட்டுப் பறந்து சென்றுவிட்டது.

அடுத்த நிமிஷம் பாலு குருவியாக மாறிவிட்டான். அவனுக்கு அழுகையும் ஆத்திரமுமாக வந்தது. "அம்மா, நான் குருவியாகப் போய்விட்டேன், அம்மா!" என்று அலறினான்.

பாலுவின் அழுகைச் சத்தத்தைக் கேட்ட அவன் அம்மா ஓடோடியும் வந்தாள். பாலு அழுது கொண்டே படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டு, தான் கனவில் கண்ட கதையைச் சொன்னான்.

அதைக் கேட்ட அவன் அம்மா உள்ளூறச் சிரித்துக் கொண்டே, "ஆமாம், எந்த ஜீவனையும் துன்புறுத்தக் கூடாது; துன்புறுத்தினால், கனவில் கிடைத்த கதி கட்டாயம் பலிக்கும்!" என்றாள் தாயார்.

"அப்படியானால் நான் இனிமேல் எந்த ஜீவனையும் துன்புறுத்த மாட்டேன், அம்மா!" என்றான் பாலு.





## பயங்கொள்ளிகள்!

சிட்டு:—ஓட்டப் பந்தயத்தில் இன்றைக்கு என்னோடு ஓட வந்த பசங்களெல்லாம் பயந்தாங்கொள்ளிகள் அப்பா!

தகப்பனார்:—ஏண்டா?

சிட்டு:—எல்லாரும் என்னைக் கண்டு பயந்து கொண்டு முன்னாலேயே ஓடிப்போய் விட்டார்கள்! —எஸ். லலிதா.



## தரித்திரப் பேச்சு

மனைவி:—உங்கள் கோட்டில் இருக்கும் கிழிசலைத் தையற்காரரிடம் கொடுத்துத் தைக்கச் சொல்றதுதானே? எத்தனையோ நாளாய் அப்படியே வைத்திருக்கேளே?

கணவன்:—எனக்குத் தெரியாதா. தெரியும். கிழிசலைப் பார்க்கிறவா இப்பத்தான் கிழிஞ்சதாக்கும்னு நினைச்சுக்குவா. தைச்சுப் போட்டுண்டால் தரித்திரப் பயல்னு நினைச்சுப்பா. தெரிஞ்சுதா? —டி. நடராஜன்.



## நல்ல யோசனை!

டாக்டர்:—இன்று எப்படி இருக்கு உடம்புக்கு?

நோயாளி:—இன்னிக்கு ஜுரம் இல்லை. மூச்சு மட்டும் சரியாக விட முடியவில்லை.

டாக்டர்:—அவ்வளவுதானே! அதை நாளைக்கு நிறுத்திவிடுகிறேன்! —இ. எஸ். சீனிவாசமூர்த்தி.



## உயர்ந்த நடிகன்

சினிமா முதலாளி (தன் படத்தில் நடிக்க வந்தவனிடம்):—நான் நடிப்பைத் தான் முக்கியமாகக் கருதுகிறேன்; நீ இதற்கு முன் வேறு படத்தில் நடித்திருக்கிறாயா?

நடிகன்:—நான் இதற்கு முன் 'காலச்சக்கரம்' என்ற படத்தில் அசரீரியாக நடித்திருக்கிறேன். —நா. கந்தசாமி.



## குற்றவாளி அல்ல!

மாஜிஸ்ட்ரேட்:—நீ குற்றம் செய்தாயா, இல்லையா?

குற்றவாளி:—இல்லவே இல்லீங்க.

மாஜிஸ்ட்ரேட்:—ஜெயிலில் எப்போதாவது இருந்திருக்கிறாயா?

குற்றவாளி:—என்னுங்க இப்படி கேக்கறீங்க? இதுதானே முதல் திருட்டு. எப்படிங்க ஜெயில்லே இருந்திருப்பேன்? —வாளாடி பிச்சை.

## நல்ல வேலை

சேற்றில் அகப்பட்டுக் கொண்ட மோட்டார் வண்டி ஒரு கிராமவாசியின் உதவியால் வெளியேற்றப்பட்டது.

மோட்டார் டிரைவர் (அந்தக் கிராமவாசிக்கு ஒரு ரூபாய் இனாமாகக் கொடுத்து விட்டு):—இப்படி அடிக்கடி நடக்கிறதா?

கிராமவாசி:—ஆமாங்க; இப்போது சேற்றில் அகப்பட்டுக் கொண்ட உமது வண்டி ஆறாவது!

டிரைவர்:—அப்படியானால் நீ முழுவதும் இந்த வேலையிலேயே உன் பொழுதெல்லாம் செலவழிந்து விடுமே! உன் சொந்த வேலையை இரவில்தான் செய்கிறாயா?

கிராமவாசி:—ஆமாங்க!

டிரைவர்:—என்ன வேலை?

கிராமவாசி:—இந்தச் சேற்றிற்குத் தண்ணீர் ஊற்றுவதுதான்! —எம். எஸ். துரைசாமி.



## பரோபகாரம்

பையன்:—அம்மா, எனக்கு ஒரு அணா கொடுங்க, அம்மா!

தயார்:—உனக்கு எதற்காக அணா இப்போ?

பையன்:—இல்லே, அம்மா! வாசலிலே ஒரு கிழவன் கத்திண்டு போறான் அம்மா! அவனைப் பார்த்தால் பாவமாய் இருக்கு, அம்மா!

தாயார் (பையனைத் தழுவிக்கொண்டே):—என் கண்ணே! உனக்கு யாருடா இவ்வளவு பரோபகாரமாய் இருக்கச் சொல்லிக் கொடுத்தா? ஆமாம், கண்ணு! அவன் என்னவென்று கத்தினான்?

பையன்:—"ஐஸ் க்ரீம்"னு கத்தினான், அம்மா! —எஸ். டி. சுசீலா.



## கண்ணாடி காட்டியது

பாலு:—நீ முட்டாளென்று உன் முகம் கண்ணாடிபோல் காட்டுகிறது.

சங்கரம்:—என் முகம் கண்ணாடியாய் இருந்தால் அதில் தெரிவது உன் முகமாகத்தானே இருக்கவேண்டும்? —எஸ். ஜி. ராஜன்.



## எங்கும் வேஷம்

போலீஸ்காரன்:—அண்ணே, பயப்படாதே! நான் திருடன்தான். சும்மா போலீஸ்காரன் வேஷம் போட்டுக்கொண்டு இருக்கேன்.

திருடன்:—ரொம்ப சௌகரியமாய்ப் போச்சு. நான் போலீஸ்காரன்தான். திருடன் வேஷம் போட்டுக்கொண்டு வந்திருக்கிறேன். —டி. ஆர். நடராஜ முதலியார்.

# பொழுது விடிந்தது

ராமு



"பத்மா! 'ட்ரெய்னிங் ஸ்கூ'லில் உனக்கு இடம் கிடைத்து விட்டது. நாளைக்குத் திறக்கிறார்கள். காலை எட்டு மணைக்கெல்லாம் தயாரா யிருக்கணும், தெரிந்ததா?" என்று அப்பொழுது தான் ஆபீஸிலிருந்து திரும்பிய விசு கோட்டை அவிழ்த்துக் கொண்டே தன் தங்கை பத்மாவைப் பார்த்துக் கூறினான்.

"அண்ணா எனக்கென்னமோ இந்த வருஷம் சேருவதில் இஷ்டமேயில்லை. மன்னிக்கும் நான் இங்கு வந்ததி லிருந்து உடம்பு சரியாயில்லை. நான் 'ட்ரெய்னிங்'குக்குச் சென்று விட்டால் அவன் பாடு ரொம்பவும் கஷ்டமாய் விடும். இந்த வருஷம் நான் வீட்டி லிருந்தே படிக்கிறேன். அப்புறம் அதைப் பற்றி யோசிக்கலாமே" என்றாள் பத்மா.

"இல்லை, பத்மா! ஒரு வருஷம் சும்மா யிருப்பதெல்லாம் வீண் பேச்சு. மன்னியைப் பற்றி கவலைப் படாதே. அதற்கெல்லாம் நான் ஏற்பாடு பண்ணுகிறேன். நாளைக்கே ஒரு தந்தி கொடுத்து மன்னியின் தாயாரை இங்கு வரவழைக்கிறேன். அப்பொழுது கஷ்டமே யிருக்காது. என்ன கமலா, நீ என்ன சொல்லுகிறாய்?" என்று தன் மனைவியைப் பார்த்துக் கேட்டான் விசு.

"ரொம்ப சரி" என்றாள் கமலா.

★

பத்மா விசுவின் ஒரே தங்கை. கமலா விசுவின் தர்ம பத்தினி. விசுவிற்கும் பத்மாவிற்கும் ஒருவரை யொருவர் விட்டால், உலகத்தில் உறவு என்று சொல்லக் கூடியவர் ஒருவரு மில்லை. கமலாவிற்குத் தன் விதவைத் தாயாரையும் பாட்டியையும் தவிர வேறு ஒருவருமில்லை. அவள் தாயார் சீதம்மாள் ரொம்பவும் கஷ்டப் பட்டுப் பல பேரிடம் கெஞ்சி உபகாரச் சம்பளம் பெற்றுக் கமலாவைப் படிக்க வைத்து, 'ட்ரெய்னிங் ஸ்கூ'லிலும் சேர்த்து நாலு காசு சம்பாதிக்கும்படி செய்தாள். அவள் நன்றாய்ச் சம்பாதிக்கும் சமயத்தில் விசு வந்து குறுக்கிட்டான். சீதம்மாளும் பாட்டியும் எவ்வளவு புத்தி கூறியும் கேட்காமல், 'விசுவைத்தான் மணப்பேன்' என்று பிடிவாதம் செய்து, தன் பிடிவாதத்தைச் சாதித்துக் கொண்டாள் கமலா. அப்பொழுது விசுவும் ஒரு பள்ளியில் உபாத்தியாயராகத்தா னிருந்தான். இருவருடைய சம்பாதனையும் சேர்ந்து யுத்த காலத்திலும் பசியாமல் புசிக்க ஒருவாறு உதவியது.

இந்தச் சமயத்தில்தான் ஒரு நாள் பத்மா அவர்களிருவரும் திகைப்புறும் வண்ணம் கண்ணீரும் கம்பலையுமாக அவர்களிடம் அடைக்கலம் புகுந்தாள். பத்மாவின் கணவன் கெட்ட சகவாசத்தின் காரணமாக அவளை அடித்துப் புடைத்து வீட்டை விட்டு வெளியே தள்ளவே, பத்மா வேறு வழியின்றி ஒரு சிநேகிதியின் உதவியால் சகோதரனை அடைந்தாள். ரண காயத்துடன் அலங்கோலமாய் வந்த பத்மாவைக் கண்டதும் விசுவின் இரத்தம் கொதித்தது. "என்னவானாலும் சரி, அந்தப் பயலிடம் இனி தங்கையை அனுப்புவதில்லை" என்று சங்கல்பம் செய்து கொண்டு, அவளுடைய எதிர்கால நன்மையை உத்தேசித்து 'ட்ரெயினிங் ஸ்கூ'லில் சேர்ப்பதென்று தீர்மானித்து விட்டான்.

பிறந்தது முதல் ஒண்டிக் கட்டையாய்த் தனக்குச் சமமான தோழிகளென்றோ, உறவினரென்றோ மருந்துக்குக்கூட ஒருவருமில்லாமல் வளர்ந்த கமலாவிற்குப் பத்மாவைக் கண்டதும் ஏதோ தெய்வலோகப் பதவி கிட்டினது போலிருந்தது. அவளது நிலைமை கமலாவின் இளகிய மனதை உருக்கிவிட்டது. பத்மா தன் அகத்திற்கு வந்தது முதல் அவளது துக்கத்தைப் போக்கடிப்ப

தற்கு எவ்வளவு மார்க்கங்கள் உண்டோ, அவ்வளவையும் கையாண்டாள் கமலா.

★

கமலாவின் உடல் நலத்தைக் கவனித்துக் கொள்வதற்காக, அவள் தாயாரையும் பாட்டியையும் வரும்படி தந்தியடித்தான் விசு. தந்தியைக் கண்டதும், கமலாவின் தாயார் சீதம்மாளும், பாட்டியும் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தனர். கமலாவும் பத்மாவும் இருந்த ஒற்றுமை அவர்களுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

“அது என்னமோம்மா! என்ன வேளையில் பிறந்தாளோ கமலா, அன்றைய தினத்தி லிருந்தே அவளுக்குக் கஷ்டம்! அப்பாவைப் பறி கொடுத்த அவளுக்கு முதலில் படித்து முன்னுக்கு வரவேண்டுமே என்று கவலை. இப்பொழுது குடும்பத்தை நடத்த வேண்டுமே என்று கவலை. போதாக்குறைக்கு இந்த வாழாவெட்டி நாத்தனார்! அவள் குலுக்கலும் மினுக்கலும், அப்பப்பா! குழந்தையின் உடம்பு துரும்பாய்ப் போய்விட்டது. இப்படி வாழாவெட்டிக் கெல்லாம் இராப் பகலாய் உழைத்தால் ஏன் போகாது?” என்று தன் தாயாரிடம் சீதம்மாள் அங்கலாய்த்துக் கொண்டாள்.

அவள் கூறியவை யாவும் பக்கத்து அறையிலிருந்த பத்மாவின் காதுகளில் அம்புபோல் பாய்ந்தன. அன்று முதல் பத்மாவின் வாழ்க்கையே மாறியது. அலங்காரங்களையே வெறுத்தாள். படிப்பு நேரம் போக, பாக்கி நேரங்களில் வீட்டு வேலைகள் செய்வதில் கவனம் செலுத்த வாரம்பித்தாள். பத்மாவின் மாறுதல் விசுவையும் கமலாவையும் ஆச்சரியத்திற் குள்ளாக்கியது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. கமலா சமையலுள்ளில் ஜுரமாயிருக்கும் தன் கணவன் விசுவிற்காகக் கஞ்சி காய்ச்சிக் கொண்டிருந்தாள். அப்பொழுது, “கமலா! நான் சொல்வதைக் கேள். உனக்கோ இன்னும் கொஞ்ச நாள் போனால் குழந்தை பிறந்துவிடும். இவளோ இப்பொழுதுதான் அரிக்குழி வெட்டுகிறாள். ஐந்து வருஷ ட்ரெய்னிங்குக்கு அப்புறம் இவள் சம்பாதித்து உனக்குக் கொட்டப் போறாளாக்கும்! உனக்குக் குடும்பம் பெருத்து விட்டால் ரொம்பக் கஷ்டம். இந்தா, ஒன்று அவளை ஹாஸ்டலில் சேர்த்து விடு: இல்லையா, நீ என்னுடன் வந்து விடு. இந்தச் சிறுக்கி ஒழிந்த பிறகு வரலாம்” என்றாள் சீதம்மாள்.

“அம்மா! அவளை ஹாஸ்டலில் சேர்ப்பதென்பது முடியாத காரியம். அவளை வைத்துப் போஷிப்பது எங்கள் கடமை. உன்னுடன் வந்து விடுவதென்பதும் நடக்காத காரியந்தான். கணவனுடன் எந்தக் கஷ்ட நிஷ்டூரத்திலும் வாழ்க்கை நடத்துவதுதான் மனைவியின் கடமை” என்று சொல்லிவிட்டுக் கஞ்சியை எடுத்துக் கொண்டு சென்றாள் கமலா.

“உம்... அந்தச் சிறுக்கி என்ன மருந்திட்டாளோ?” என்று சீதாவின் வாய் முணுமுணுத்தது.

அடுத்த அறையில் இருந்தபடி சீதாவின் பேச்சை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த பத்மாவின் மனம் எப்படிப் புண்பட்டிருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. ஆனால், “எந்தக் கஷ்ட நிஷ்டூரத்திலும் கணவனுடன் வாழ்க்கை நடத்துவதுதான் மனைவியின் கடமை” என்ற வார்த்தைகள் மட்டும் அவள் மனதில் பசுமரத் தாணிபோல் பதிந்தன.

★

மறுநாள் காலை படுக்கையை விட்டு எழுந்த கமலா, பத்மாவின் படுக்கை போட்டது போட்டவண்ணமே காலியாயிருப்பதைக் கண்டு திடுக்கிட்டாள். கட்டிலுக்கு அருகிலிருந்த மேஜையின் மேல் 'கமலா' என்று விலாசமிட்ட கடிதம் ஒன்று கிடந்தது. அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது இதுதான்:

அன்புள்ள மன்னிக்கு,

அநேக நமஸ்காரம். நான் எனது கணவனிடம் செல்கிறேன். அடித்தாலும் புடைத்தாலும் கணவனிடம் இருந்தால்தான் மேன்மை யென்பதை இவ்வளவு நாள் அறியாம லிருந்தேன். அறிந்திருந்தால் உங்களுக் கெல்லாம் இவ்வளவு தூரம் சிரமம் இருந்திருக்காது.. அண்ணாவிடம் சொன்னால் கோபித்துக் கொள்வாரோ என்ற பயத்தால் சொல்லாமல் கிளம்பி விட்டேன். அவனை வீணாய்க் கவலைப்படச் சொல்லாதே. என் கணவரை வழிக்குக் கொண்டு வருவதற்குள்ள சக்தியை நான் உன் வாய்மொழியால் பெற்று விட்டேன். கட்டாயம் வெற்றியடைவேன் என்ற நம்பிக்கைக்கு இடம் இருக்கிறது.

கவலைக் குள்ளாக்கியதற்கு மன்னிக்கவும்.

உங்கள் பிரியமுள்ள,
பத்மா.

# நவீன யம தர்பார்

## ★ விந்தன் ★

[யமதர்ம ராஜன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறான். யம கிங்கரர்கள் பூலோகத்திலிருந்து பிடித்துக் கொண்டு வந்தவர்களை ஒவ்வொருவராகக் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள். சித்திர குப்தன் அவரவர்கள் செய்த குற்றத்தை எடுத்துச் சொல்கிறான்.]

சித்திரகுப்தன் :—

('கன்றுக்கு வாய் கட்டி' என்ற மெட்டு)

கால்புட்டி மண்ணெண்ணெய்
வாங்க வாராவாரம்
காற்றாய்ப் பறக்க வைத்தான்
புட்டியும் புட்டியும் முட்டி உடைபட
ரத்தம் கசிய வைத்தான்!

யமன் :—அப்படியா? இவனைக் கொண்டு போய் உடனே ஈரான் தேசத்து எண்ணெய்க் கிணற்றுக்குள் தள்ளிவிட்டு வாருங்கள்!

சித்திரகுப்தன் :—

பச்சைப் பசேரென்ற
கட்டைகளைப் போட்டு
கண்கள் கலங்க வைத்தான்!
புப்புப்பூ புப்புப்பூ என்று ஊதச்செய்து
புகையை வரவழைத்தான்!

யமன் :—பாவி! பெண்களை அப்படியா வதைத்தான்?......

சித்திரகுப்தன் :—இல்லை, மகாராஜா! இப்பொழுதெல்லாம் பூலோகத்தில் புருஷர்கள்தான் அடுப்பு ஊதுகிறார்கள்!

யமன் (சுற்று முற்றும் பார்த்துப் பீதியுடன் விழித்துக் கொண்டே) :—உஸ்...

இதைக் கேட்டுக் கொண்டே அவள் வந்து விடப் போகிறாள்!—சரி, இவனைக் கொண்டு போய் நம்முடைய மடைப்பள்ளியில் தள்ளி, பச்சை விறகுகளையே வெட்டிப் போட்டு, அடுப்பை ஊத வையுங்கள்!

சித்திரகுப்தன் :—

கல்லையும் நெல்லையும்
அரிசியில் கலந்து
கொள்ளை லாபம் அடித்தான்
'என்ன இது?' என்று
கேட்டவர்க்கெல்லாம்
'எனக்குத் தெரியா' தென்றான்!

யமன் :—பேராசைக்காரன்! அதே கல்லையும் நெல்லையும் தண்ணீரில் கலக்கி இவன் வாயில் ஊற்றுங்கள்!

சித்திரகுப்தன் :—

ஆஸ்திரேலியாவில்
குதிரைக்குப் போடும்
கோதுமை கொண்டுவந்து
உண்ணுங்கள் உடம்புக்கு
நல்ல தென்றான் பாவி
நய வஞ்சகக் காரன்!

யமன் :—மோசக்காரன்! இவன் அடுத்த ஜன்மத்தில் அதே ஆஸ்திரேலியாவில் குதிரையாய்ப் பிறந்து, அதே கோதுமையைத் தின்று வயிற்றை வளர்க்கட்டும்!

சித்திரகுப்தன் :—

சர்க்கரை வாங்கினால்
வேறு ஏதாகிலும்
வாங்கவேணும் என்றான்
கட்டிக் கொடுக்கும் காகிதம் காலணா
என்று வசூலித்தான்!



யமன் :—இவன் உடம்பெல்லாம் சர்க்கரைத் தண்ணீரைத் தெளித்து, வெய்யிலில் உருட்டி, ஈக்களை விட்டுப் பிடுங்கச் செய்து, எறும்புகளைக் கொண்டு கடிக்க விடுங்கள்!

சித்திரகுப்தன் :—

உளுந்தை ஒளித்துவைத்
தில்லையென்று சொல்லி
இட்டிலி பக்தரெல்லாம்
இட்டிலி! இட்டிலி!' என்று
ஏங்கவைத்தான்
இரக்கம் இல்லா நெஞ்சன்!

யமன் :—இரக்கமே இல்லாத இவன், அடுத்த ஜன்மத்தில் வெள்ளைக்காரனாகப் பிறந்து இந்தியாவின் மந்திரியாகட்டும்!

சித்திரகுப்தன் :—

கட்டுப் பாட்டின்படி
என்னத்தைக் கேட்டாலும்
'இல்லை' என்றானே பாவி!
கறுப்புக் கடைப்படி
இல்லாததை யெல்லாம்
'இருக்கு' என்றானே பாவி!

யமன் :— என்றைக்காவது ஒரு நாள் இவன் சம்பாதிக்கும் பணத்தை யெல்லாம்

விட்டுவிட்டு நம்மிடம் வரவேண்டும் என்பதையே மறந்து விட்டான் போலிருக்கிறது! — சரி, இவன் நம் யமலோகத்தில் என்ன கேட்டாலும்—தண்ணீர் கேட்டால் கூட—'இல்லை' என்று சொல்லுங்கள்!

சித்திரகுப்தன் :—

'கற்பூரம்! கற்பூரம்!'
என்று எல்லோரையும்
கதற வைத்திட்டானே!
கடவுளுக் கேநாமம்
போட்டுவிட்டு 'இல்லை'
என்றே பாடினானே!

யமன் (சிம்மாசனத்தை விட்டுத் துள்ளி எழுந்து வந்து அந்தக் கற்பூர வியாபாரியை அன்புடன் அணைத்துக் கொண்டு) :— சபாஷ்! இவனே உத்தமன்! இவனே சத்தியன்! இவனே என்னுடைய பக்தன்! ஆமாம்! கல்லால் அடித்தவருக்கும், செருப்பால் உதைத்தவருக்கும் காட்சி கொடுத்த அந்தக் கடவுள் என்னை மட்டும் காலால் உதைத்துத் தள்ளினு னல்லவா? அந்தக் கடவுளுக்கு அவசியம் நாமம் போட வேண்டியதுதான்! அப்படிச் செய்த இவன் என்னுடன் அரியாசனத்தில் அமர்ந்து, என்னிடம் மன்னிப்புக் கோருகிறவர்களுக்கெல்லாம் எக்காலும் 'இல்லை, இல்லை!' என்று சொல்லிக் கொண்டிருக்கட்டும்!

[யமதர்மனின் எதிர்பாராத இந்தத் தீர்ப்பைக் கண்டு சித்திரகுப்தன் மூர்ச்சையாகிறான். தர்பார் கலைகிறது.]

# வட்ட மேஜை

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

தாங்கள், தங்கள் ஜனவரி 14-ந் தேதி இதழில் 'மதராஸிக்கு வந்த மகிமை' என்ற தலைப்பில் இடமேன்று மதராஸ் ராணுவ வீரர்களைப் பற்றித் தப்பபிப்பிராயங் கொண்டு எழுதியிருப்பது வருந்தத் தக்கதாகும். தங்கள் மனதில் மதராஸில் மட்டுமே 'பயனியர் படைகள்' இருப்பதாக எண்ணம் போலும். மதராஸைப் போல், பெங்கால், பம்பாய் முதலிய சகல மாகாணங்களிலிருந்தும் பயனியர் பட்டாளம் ஏராளமாக இராணுவத்தில் இருப்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். பர்மா முனையில் 'மதராஸ் பயனியர்'களை வரும்படி அழைத்தால், அது மற்ற மாகாணப் பயனியர்களைவிட மதராஸ் பயனியர்கள் உழைப்பிலும், அறிவிலும், வீரத்திலும் சிறந்தவர்கள் என்பதே காரணமாகும். தற்சமயம் இந்தியப் பட்டாளத்தில் மதராஸ் வீரர்களில் பெரும் பகுதியோர் தொழிலாளர்களாகவும், குமாஸ்தாக்களாகவும், டிரைவர்களாகவும், பீரங்கியோர்களாகவும், அல்லது வைத்தியத் தொழிலில் சம்பந்தப் பட்டவர்களாகவும் இருக்கிறார்களே தவிர, பயனியர்களாக சிறு பகுதியினரே இருக்கின்றனர். பர்மா மீட்கப்படுமானால் அல்லது மாண்டலே பிடிபட்டதென்றால், அந்தப் பெருமையில் மதராஸிகளுக்கு முக்கால் பங்கு உண்டென்பதை ஒவ்வொரு ராணுவ வீரனும் இந்தியனும் மறுக்க முடியாதென்பதைத் திட்டமாகக் கூறுகிறேன். தற்கால இந்திய ராணுவத்தின் மேல் நாட்டாருக்கிடையில் மேன்மையுடனும், அறிவுடனும் உழைத்து, இந்தியரும் எவ்வகையிலும் உயர்ந்தவர்கள் என்பதை நிரூபிப்பது மதராஸ் வீரர்களே யாகுமென்பதை ஒவ்வொரு அந்நிய நாட்டு வீரனுங்கூட அறிந்த விஷயமாகும். இப்போது முன்னின்று போராடும் மதராஸ் 'சாப்பர்'களைத் தான் தாங்கள் 'பயனியர்' என்று குறிப்பிடுவதாகத் தெரிகிறது. அவர்களின் வேலை முன்னேறும் படைகளின் பாதம் தேயாதபடி பாதைகள் உண்டாக்குவது அல்லவென்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவர்கள் முன்னின்று பாலம் கட்டுவது, அல்லது வெடி குண்டு வைப்பது ஆகிய தீரச் செயல்களைச் செய்யும் இஞ்சினியர் பகுதியைச் சேர்ந்தவர்கள். இவ்விதத் தியாகம் செய்யும் மதராஸ் வீரர்களின் பேரில், மதராஸ் ஜனங்களுக்கு யுத்தத்திற்குப் பிறகு பெருமை அடைவதற்குக் கிடைக்க வேண்டியது பாழாய்ப்போன ஆக்யாப், மாண்டலேயைக் கட்டும் கூலிவேலையாய் ஒரு போதும் இருக்க முடியாதென்று திட்டமாய் நம்புகிறேன்.

இப்படிக்கு,
'கல்கி' ராணுவ அன்பன்,
து. தேவசகாயம்.
எச்/லெசக் (முதல் கிரேட்)
221, எ. ஒ. டி., எஸ். இ. ஏ. ஸி.

[மேற்படி இராணுவ அன்பரின் கடிதத்தை மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன். "மதராஸிக்கு வந்த மகிமை" என்ற கட்டுரையில் மதராஸி வீரர்களைப் பற்றி எவ்விதத்திலும் குறைத்துச் சொல்லப்படவில்லை. இவ்வளவு தீரச் செயல்களைச் செய்து வரும் மதராஸி இராணுவ வீரர்கள் யுத்தத்திற்குப் பிறகு சரியாக மதிக்கப் படவேண்டுமென்பதுதான் மேற்படி கட்டுரையில் வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கிறது. 'இராணுவத்தில் உள்ள வரை இந்தியச் சிப்பாய்கள் எதிர்பார்க்கக்கூடிய பெரிய பதவிகள் ஸுபேதார், ஜமேதார் உத்தியோகங்களும், அதற்குப் பிறகு தாலுகா கச்சேரி டபேதார் உத்தியோகமும்' என்ற நிலைமை மாறவேண்டுமென்பதுதான் நமது நோக்கம். அதே மாதிரி மதராஸி வீரர்களின் தியாகங்களின் பலனாக மதராஸிகள் அடையக் கூடிய பலன் கூலி வேலை செய்யும் உரிமையாக மட்டும் இருக்கக் கூடாதென்றும், யுத்தத்திற்குப் பிறகு பர்மாவில் பிரிட்டிஷாருக்கு என்னென்ன உரிமைகள் இருக்குமோ, அவ்வளவு மதராஸிகளுக்கும் இருக்க வேண்டும் என்றும் வற்புறுத்துகிறோம். அவ்விதம் நடக்குமானால், நம்மைவிட மகிழ்ச்சியடையக் கூடியவர்கள் யாரும் இருக்க முடியாது. —ஆசிரியர்.]

# பாரதி நிதிக்காகக் கதம்பக் கச்சேரி

"கிட்டு"

கதம்ப நிகழ்ச்சி என்று கேள்விப்பட்டதும், டில்லித் தமிழர்களுக்கு உற்சாகம் பொங்கிக் கொண்டு போயிற்று. கலை வல்லவர்கள் தங்கள் கைத் திறனைக் காட்ட முன் வந்தார்கள். சங்கீத வித்வத் சமாஜத்தார் தங்கள் சங்கீதக் கருவிகளைத் தூக்கிக் கொண்டு வந்தார்கள். கலாபிமானிகள் டிக்கெட் விற்றுக் கொடுக்க வந்தார்கள். இரண்டு கட்சியாரும் சேர்ந்து டிக்கெட் வாங்க வந்தார்கள்.

கதம்ப நிகழ்ச்சியிலோ விதம் விதமான, விநோதமான, விமரிசையான அம்சங்கள். சங்கீத வித்வத் சமாஜத்தின் வாத்திய கோஷ்டியார், "பொழுது புலர்ந்தது" என்று வாசித்து நிகழ்ச்சியை ஆரம்பித்து வைத்தார்கள். "பாட்டுக் கொரு புலவன் பாரதி யடா!" என்று ஒரு குட்டி நிகழ்ச்சி. பிறகு, கமலா, ஸியாமளா, சாரதா சகோதரிகள் பாரதியின் "பத்துப் பன்னிரண்டு தென்னை மரம்", "முருகா முருகா" என்ற பாட்டுகளைப் பாடினார்கள். அதை யடுத்தாற் போல் "சாப்பாட்டு ராமன்கள் சங்கம்" என்று ஒரு நாடகம்.

"தீராத விளையாட்டுப் பிள்ளை" என்று குமாரி ஸரஸ்வதி பாட, குமாரி விசாலாட்சி அபிநயம் பிடித்தாள். அபிநயத்தின் அழகை அநுபவித்து முடிவதற்குள், கோபால கிருஷ்ணனின் 'பாமாலை' என்ற பாட்டு காதில் விழுந்து, பாரதி பாடல்களின் பெருமையை முரசு கொட்டியது. அதன் பிறகு தமிழகத்தில் பாரதியின் சேவையால் மறுமலர்ச்சி ஏற்பட்டதைச் சித்திரித்துக் காட்டும் "அருணோதயம்" என்ற நிழலாட்டம் நடந்தது. நிழல்களின் அசைவுகளுக்கு இன்னிசை மூலம் விளக்கம் செய்து காட்டியது ஜி. தர்மாம்பாள் அவர்களின் குரல்.

நிழல்கள் மறைந்தன. அரங்கம் ஒளிமயமாயிற்று. "ராரா வேணுகோபாலா" என்ற 'அந்தக் காலத்தி'ய 'பிலஹரி' ஸ்வரஜதி வாத்யங்களில் முழங்கிற்று. 'அந்தக் காலத்தி'ய ஸ்வரஜதிக்கு 'இந்தக் காலத்திய' பாணியில் குமாரி தாரா நிருத்யம் ஆடினார்.

அடுத்தபடியாக "மாளவிகா" என்ற நாடகம். "மாளவிகா"வாக நடித்த ஸ்ரீமதி பார்வதி கைலாசபதி டில்லித் தமிழ்ப் பெண் மணிகளின் பாரதி அன்புக்கு அத்தாட்சியாக விளங்கினார்.

அடுத்ததாக ஸ்ரீமதி பழனி விஜயலக்ஷ்மி பாரதி பாட்டுகளைப் பாடினார். இந்தச் சங்கீத விருந்திற்குப் பிறகு, சபையோர் திடீரென்று குலுங்கக் குலுங்கச் சிரிக்கத் துவங்கி விட்டார்கள். காரணம், மேடையின் மீது வேலைக்காரன் சபாபதி தோன்றியதுதான். சம்பந்த முதலியாரின் சபாபதி நாடகத்திலிருந்து ஒரு காட்சி. வேலைக்கார சபாபதியாக நடித்த ஒய். ஜி. பார்த்தசாரதி இன்னும் வீட்டை விட்டு வெளியே தலை காட்டவில்லை. ஏனென்றால், டில்லித் தமிழர்கள் அவரை "சபாபதி" என்றே கூப்பிட்டு உயிரை வாங்கச் சித்தமாயிருக்கிறார்கள்.

இந்த நாடகத்திற்கு அடுத்தபடி லலிதா சுப்ரமண்யம் பரத நாட்டியம். ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி பின்பாட்டுப் பாடினார். இந்த பரத நாட்டியத்தைத் தொடர்ந்து "ரண பிக்ஷையில் ரகளை" என்ற விநோதமான நிழலாட்டம்.

கதம்ப நிகழ்ச்சியின் கடைசி இரண்டு காட்சிகளை நிச்சயம் குறிப்பிட்டே யாக வேண்டும். "நந்தா"வின் குறத்தி நாடகத்தில், டில்லித் தமிழர்கள், குற்றாலக் குறவனையும் குறத்தியையும் தத்ரூபமாய்க் கண்டார்கள். குறத்தி ஆடிவிட்டு வெளியே வந்ததும், "என்ன முத்தையா, நீ என்ன, வீணை வாசிப்பதை விட்டுவிட்டு இப்படியே குறத்தியாகி ..." என்று நான் கேட்ட போது, "அதென்ன, அப்படிச் சொல்றீங்க! கொறத்தி வீணை மீட்டக் கூடாதுன்னு யாரு சொன்னதுங்கை?" என்று நீட்டி முழக்கிக்கொண்டு வந்து விட்டார் முத்தையா.

கடைசி நிகழ்ச்சி ஒரு காட்சி ஜோடனை. பாரதியின் 'தண்டிற் பழவினைப் போல்' என்ற பாட்டை எஸ். தர்மாம்பாள் அவர்கள் திரைக்குப் பின்னாலிருந்து பாடிக் கொண்டே, மேடையின் மேல் ஹேமலதா கோஷ்டியாரின் மூலம் பாட்டின் பொருளை விளக்கிக் காட்டினார்.

[ஸ்ரீ ஆர். சுப்ரமண்யம், ஸ்ரீ ஏ. வி. ஒய். நாராயணன் ஆகியவர்களின் நன்முயற்சியினால் நடந்த மேற்படி கதம்பக் கச்சேரியில் வசூலான ரூ. 511-ம் எட்டயபுரம் பாரதி நிதிக்காக நமக்கு அனுப்பி வைக்கப்பட்டது. —ஆசிரியர்.]



# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி**

## 93. சூரியனும் நீரில் முழுகினான்

தம்பி பரதனது சேர்ந்த நிலையை பார்க்க சகிக்கவில்லை ராமனுக்கு. அதோடு தந்தை தசரதன் இறந்து போனான் என்ற செய்தியையும் கேட்க நேர்ந்தது. அப்பாவி ராமன் மனசு என்ன ஆகும்? இடிந்து போய் விட்டது.

எப்படியோ நீரில் மூழ்கி நீர்க் கடன்களெல்லாம் கழித்து, அவை காரணமாக துயரம் தணிந்தவனாய் இருக்கிறான். அப்போது எதிரே வருகிறார்கள் தாய்மார், சான்றோர் சுமந்திரன் ஆகிய உற்றார்.

தாய்மாரின் கோலத்தைக் கண்ட மாத்திரத்தில் இதயத்தை வெடித்துக் கொண்டு வந்து விட்டது துயரம். துயர வெறி கொண்டு புலம்புகிறான்.

'எந்தை யாண்டையான்
இயம்புவீர்!' என
வந்த தாயர்தம்
வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன்
சேர்ந்த கண்ணநீர் —
முந்தை நான்முகத்(து)
அவற்கும் முந்தையான்.

[எந்தை யாண்டையான் இயம்புவீர் என: எங்கள் அப்பன் தசரதன் எங்கே இருக்கிறான், கொஞ்சம் சொல்லுங்களேன் என்று.—இந்த வார்த்தைகள் இதயத்திலுள்ள தாங்க முடியாத துயரத்தை அப்படியே வெளியில் கொண்டு வந்து தள்ளிவிடுகின்றன. வந்த தாயர் தம் வயங்கு சேவடி: வந்த தாய்மாரின் புனிதமாய் விளங்கும் திருவடிகளை; சிந்தி நின்றனன் சேர்ந்த கண்ணநீர்: கலங்கிச் சிவந்த கண்ணிலிருந்து வந்த கண்ணீரை வடித்து நின்றான்; யார்? பிரம்மதேவனுக்கும் அவனது சிருஷ்டி தத்துவத்துக்கும் முன்னுள்ள தத்துவமாகிய பரம்பொருளின் அம்சமாகிய ராமன். பர தத்துவத்தோடு ஒன்றியுள்ள ஞானி, ராமன் என்பது கருத்து. அத்தகைய ஞானியையும் பாடாய்ப் படுத்தி விட்டது சோகம்.]

தாய்மார்களும் ராமனைத் தழுவிக் கொண்டு ஒரே படியாய் அலற ஆரம்பித்தார்கள். இதைப் பார்த்துக்கொண்டிருந்த சேனை என்ன, பெண்கள் என்ன அவர்களுக்கும் சகிக்க முடியவில்லை.

தாயரும் தனைப்
பெய்து தாம்தழீஇ,
ஓய்வில் அன்பினால்
உரறல் ஓங்கினார்,—
ஆய சேனையும்
அணங்கனார்களும்
தீயில் வீழ்ந்துநீ
மெழுகின் தேம்பினார்.

[தனைப் பெய்து: ஒன்றாய் ராமன்மேல் விழுந்து; தாம் தழீஇ: தாங்களே அவனைத் தழுவிக்கொண்டு; ஓய்வில் அன்பினால் உரறல் ஓங்கினார்: ராமன்மேல் வைத்த அளவற்ற அன்பினால் கேட்க சகிக்காதபடி அவ்வளவு உரத்த சப்தத்தில் அலறினார்; ஆய சேனையும் அணங்கனார்கள்: பக்கத்தில் நின்ற படை வீரர்களும் வேறாய்நின்ற பெண்களும்; தீயால் வீழ்ந்து நீ மெழுகின்: தீயில் விழுந்து நைந்து கசிகின்ற மெழுகைப்போல வாடி வதங்கி; தேம்பினார்: ஏங்கினார்.]

அடுத்தாற்போல் இந்தத் தாய்மார் எங்கே போகிறார்கள்:

பின்அவ் வீரரைப்
பெற்ற பெற்றிஅப்
பொன்னனார்களும்,
சனகன் பூவையைத்
துன்னி, மார்புறத்
தொடர்ந்து புல்லினார்,—
இன்னல் வேலையுக்(கு)
இழிந்(து)அ ழுந்துவார்.

[வீரரைப் பெற்ற பெற்றி: ராமன் முதலான நான்கு வீரரையும் பெற்றதனால் ஆய பெருமை வாய்ந்த; அப் பொன்னனார்களும்: அந்தத் தாய்மார்களும்; சனகன் பூவையைத்

துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினர்: மூன்று தாய்மார்களுடைய கைகளும் சேர்ந்த வண்ணமாய் சிதையைத் தழுவினர்: இன்னல் வேலைபுக்கு இழிந்து அழுந்துவார்: துயரமாகிய சமுத்திரத்தில் புகுந்து மூழ்கி அமிழ்ந்து விட்டார்—உணர்ச்சி வசமற்றார்.]

தாய்மார் அகன்ற பிறகு சேனை வீரர், நகரத்துப் பிரதானிகள், எல்லாருமாக ஒரே சோகத்தில் வந்து அணுகினார்கள் ராமனை:

உலகமே அந்த நேரத்தில் ஒரு சோக சித்திரமாய்த் தோன்றுகிறது கவிஞரது கண்ணுக்கு.

ராமன் சூரிய வம்சத்தைச் சேர்ந்தவன் என்பது நமக்குந் தெரியும். அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு பாடலைப் பார்க்கலாம்.

படஞ்செய் நாகணைப்
பள்ளி நீங்கினான்
இடஞ்செய் தொன்குலத்(து)
இறைவன் ஆதலால்,
நடஞ்செய் தேரினான்
தானும், நீரினால்க்
கடன்செய் வான்எனக்
கடலின் மூழ்கினான்.

[படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினான்: விசாலமான படத்தைக் கொண்ட ஆதிசேஷ சயனத்திலிருந்து நீங்கி உலகத்தில் அவதரித்தவன் ராமன். அந்த ராமனது: இடஞ்செய் தொல்குலத்து இறைவன் ஆதலால்: நீண்ட புகழ் பெற்ற தொன்மையான வம்சத்துக்கு ஆதிமூர்த்தி (சூரியன்) ஆன காரணத்தால்; நடஞ்செய் தேரினான் தானும்: மகா பெரிய தேரைச் செலுத்தி வருபவனான சூரியனும்; நீரினால் கடன் செய்வான் என: தசரதனுக்கு நீர்க்கடன் செய்யும் பொருட்டு என்று சொல்லும்படி, கடலின் மூழ்கினான்: மேலைச் சமுத்திரத்தில் மூழ்கினான்.]

சூரியன் கடலில் மூழ்கியதோடு எல்லாருடைய துக்கமும், நம்முடைய துக்கமும் கூட ஒருவாறு சென்று விடுகிறது; சாந்தமே ஏற்படுகிறது.

பெரியவாள் கதை

# கம்பன் காத்தான்

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

ஐயர் மேல் 'வாரண்டு' தொடர்கிறது. இதோ புறப்பட வேண்டும். ஓட்டல்காரி அன்புடன் உணவு தந்தாள். ஐயர் அவசரமாகச் சாப்பிட்டுப் பயணங் கட்டினார். அப்போது, "அடடா!" என்று கையை உதறி, "அம்மா! சற்று இதைப் பார்த்துக் கொள்" என்று ஓடிச் சென்று அரை மணி நேரத்தில் திரும்பினார் ஐயர். ஓட்டல்காரி, "எங்கே ஓடினீர்?" என்று கேட்டாள். ஐயர், "இதோ, இந்த நூல் கம்பன் என்ற மகாகவி எழுதிய ராமாயணம். இது ஹோமர் மில்டன் தாஸ்ஸோவைவிட மிகவும் காம்பீர்யமானது. அடாடா! இதிலிருந்து உனக்குப் படித்துக் காட்டாமல் போகிறேனே" என்று சொல்லிப் புத்தகத்தைக் கவனமாகக் கைப்பெட்டியில் வைத்துக் கொண்டு கிளம்பினார். இவர் வண்டி நிலயத்திற்குச் சென்றதுமே புகை வண்டி, "இங்கே வராதே!" என்று கூவி விட்டு 'குப் குப்' என்று கிளம்பிவிட்டது. உடனே தேம்ஸ் நதிக்குச் சென்றார். அங்கே ஒரு செய்தி கிடைத்தது. உடனே மளமள வென்று உடையை மாற்றி அராபி வீரராய் விட்டார். ஆம்ஸ்டர்டாமுக்குச் செல்லும் கப்பலில் ஏறி, ஒரு உருது புத்தகத்தை விரித்துப் படித்துக் கொண்டிருந்தார்.

தந்தி பறந்தது. "தென்னிந்திய பிராமணன். உச்சிக் குடுமி இருக்கும். டோவர் வண்டியில் செல்கிறான், உடனே மறி!" — ஒற்றர் டோவர் பக்கம் கண்ணோட்டி ஏமாந்தனர். மற்றொரு தந்தி. "ஆம்ஸ்டர்டாம் கப்பல். பார். உடனே!"—ஒற்றர் கப்பலில் ஏறினர். ஒரு சார்ஜெண்டு, தபால் பையுடன் அங்குமிங்கும் கண்ணைப் போட்டவனி, ஒரு அராபி வீரனைக் கண்டான். ஆனால் அவனது பெட்டி மேல் வி. வி. எஸ். என்று எழுதியிருந்தது. "மிஸ்டர் வி. வி. எஸ். ஐயர்! தங்களுக்குத் தந்தி" என்று தந்தான். ஐயர் ஆளைக் கூர்ந்து பார்த்தார். அந்தச் சிங்கப் பார்வையிலேயே ஒற்றன் மருண்டு போனான்.

"ஐயா, யாரைத் தேடுகிறீர்கள்? தந்தி எனக்கன்று!" என்றார் ஐயர். "பெட்டி மேல் வி. வி. எஸ். என்றிருக்கிறதே" என்றான் ஒற்றன். "நான் வி. விக்கிரமசிங்" என்று ஐயர் உருதுவில் முணுமுணுத்தார். "மன்னியுங்கள்" என்று ஒற்றன் சென்றான். ஐயரும் ஆம்ஸ்டர்டாம் வந்து, அங்கிருந்து பாரிஸ் சென்றார். இச் சம்பவத்தை ஐயர் ஒரு நாள் சொல்லி, "கம்பன் காத்தான்!" என்றார்.




[சரியான அர்த்தத்தை விடுத்துத் தப்பான அர்த்தத்தை மேற்கொண்டுள்ள அநேக சொற்றொடர்களில், "கால வித்தியாச"மும் ஒன்று. "கால வித்தியாசம்" என்றால் தலை விதி என்றுதான் ஜனங்கள் பொதுவாகப் பொருள் கொள்கிறார்கள். ஆனால் இக் கட்டுரையின் தலைப்பை நான் அந்த அர்த்தத்தில் எழுதவில்லை. ஒரு நிகழ்ச்சி 1930-ல் நடக்கிறது இன்னொரு நிகழ்ச்சி 1945-ல் நடக்கிறது. அப்பொழுது இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் காலத்தால் வித்தியாசப்படுகின்றன அல்லவா? அதைத்தான் நான் இந்தக் கட்டுரையில் கால வித்தியாசம் என்று குறிப்பிட்டிருக்கிறேன்.]

## 1930-ல் நடந்தது

சென்னை
7—8—1930.

என் பிரியமுள்ள அப்பாவுக்கு,

அநேக கோடி நமஸ்காரம். நான் இங்கு சௌக்கியம். அங்கு நீங்கள், அம்மா, பாட்டி, தம்பி எல்லோரும் சௌக்கியமா?

இப்பவும், உடனே செலவுக்குப் பணம் அனுப்பும்படி நான் உங்களுக்கு இதுவரை நான்கு கடிதங்கள் போட்டும் தாங்கள் அவை ஒன்றுக்கும் பதில் போடாமல் பேசாமல் இருந்தால் நான் என்ன செய்வது? இங்கே எனக்கு ஹாஸ்டலுக்கே இரண்டு மாத பழம் பாக்கி கொடுக்கவேண்டியிருக்கிறது. காப்பி ஹோட்டலுக்கு வேறே பழம் பாக்கி இருக்கிறது. எல்லாவற்றுக்கும் சேர்த்து கிட்டத்தட்ட ஐம்பது ரூபாயாவது ஆகும்.

"மாதா மாதந்தான் முப்பது ரூபாய் அனுப்புகிறேனே, அதைத் தவிர இது வேறா?" என்று நீங்கள் கேட்கலாம். நீங்கள் என்னமோ முப்பது ரூபாயில் இந்த உலகத்தையே வாங்கி விடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது.

ஆகவே தயவு செய்து ஐம்பது ரூபாய் உடனே தந்தி மணியார்டர் அனுப்பி என் மானத்தைக் காப்பாற்றும்படி கேட்டுக் கொள்கிறேன். என் மானத்தைக் காப்பாற்றினால் உங்கள் மானத்தையும் காப்பாற்றினாற்போல். இங்கு எல்லாரும் இன்னார் பிள்ளையா இப்படி ஹோட்டலில் பாக்கி வைத்துக்கொண்டிருக்கிறான் என்று உங்கள் பெயரைச் சொல்லித்தான் ஏளனமாகப் பேசுகிறார்கள். ஆகவே உடனேயே ஐம்பது ரூபாய் தந்தி மணியார்டர் பண்ணுவீர்கள் என்று நம்பும்,

உங்கள் பிரியமுள்ள
மணி.

குறிப்பு: ஒவ்வொரு பையனைப் போல் நான் இந்தப் புஸ்தகம் வாங்க வேண்டும், அந்தப் புஸ்தகம் வாங்க வேண்டும் என்று பொய் சொன்னால் பணம் அனுப்புவீர்கள். நிஜம் சொன்னால் அனுப்புவீர்களா?

மணி.

### தகப்பனாரின் பதில்

திருச்சிராப்பள்ளி
8—8—1930.

என் பிரியமுள்ள மணிக்கு,

நீ எழுதிய ஐந்து கடிதங்களும் கிடைத்தன. நீ இப்படி நினைத்தபொழுதெல்லாம் பணம் அனுப்பு, பணம் அனுப்பு என்று எழுதினால் நான் பணத்துக்கு எங்கே போவேன்? இங்கே என்ன பணம் முளைத்தா தொங்குகிறது? ஆகவே, இன்று ரூ. 25 மணியார்டர் அனுப்பியிருக்கிறேன். அதை வைத்

துக்கொண்டு எப்படியாவது சமாளி. இதற்கு மேல் என்றால் ஒரு சல்லிக் காசுகூட அனுப்ப முடியாது.

உன் பிரியமுள்ள

அப்பா.

## 1945-ல் நடக்கிறது

திருச்சிராப்பள்ளி,
25—2—45.

என் பிரியமுள்ள மணிக்கு,

நாங்கள் எல்லாரும் சௌக்கியம். அங்கு நீயும், உன் அகமுடையாளும் சௌக்கியம் என்று நம்புகிறேன்.

இப்பவும் பணம் அனுப்பும்படி நான் நான்கு கடிதங்கள் எழுதியும் நீ பதில் போடாமலேயே இருக்கிறாய். நீ இப்படி பராமுகமாய் இருந்தால் இங்கே எப்படி குடித்தனம் நடக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்?

நீ மாசா மாசம் அனுப்பும் தொகை முப்பது ரூபாயில் இங்கே நாலு பேர் எப்படி குடித்தனம் பண்ணுகிறது என்று நினைக்கிறாய்? இரண்டு மாதமாக வீட்டு வாடகை பாக்கி. பால்காரனுக்கோ மூன்று மாதமாக ஒரு சல்லி கொடுக்கவில்லை. எல்லாப் பழம் பாக்கியையும் உடனே தீர்க்காவிட்டால் பால் ஊற்ற முடியாது என்று பத்து நாளாய் பயமுறுத்தி வருகிறான். நீயோ நான் நான்கு கடிதங்கள் போட்டும் காதில் போட்டுக்கொள்ளாமல் வாளா இருக்கிறாய். எனக்கு மானம் போகிறது. என் மானம் போனால் போகிறது. கூட உன் மானமும் போகிறதே என்றுதான் வருத்தமாக இருக்கிறது. எல்லாரும் இன்னார் தகப்பனார் இப்படி பழம் பாக்கி வைத்திருக்கிறார் என்று உன் பெயரைத்தான் சொல்லிச் சிரிக்கிறார்கள். மாதம் ரூ. 300 சம்பாதிக்கும் பிள்ளையா தகப்பனாரை இந்த ஸ்திதியில் வைத்திருக்கிறான் என்று கேட்கிறார்கள். ஆகவே உடனேயே ரூ 200 தந்தி மணியார்டரில் அனுப்பினால்தான் என் மானமும் பிழைக்கும், உன் மானமும் பிழைக்கும்.

இப்படிக்கு,

உன் பிரியமுள்ள அப்பா.

குறிப்பு:—ஒவ்வொரு தகப்பனாரைப் போல் டாக்டருக்குக் கொடுக்க வேண்டும், டானிக் வாங்க வேண்டும் என்று பொய் சொன்னால்தான் நீ பணம் அனுப்புவாய் போலிருக்கிறது. நான் நிஜத்தைச் சொல்லுகிறேனே, இல்லையோ, அதுதான் அனுப்ப மாட்டேன் என்கிறாய்.

அப்பா.

### மகனின் பதில்

சென்னை
28—2—45

என் பிரியமுள்ள அப்பாவுக்கு,

நீங்கள் எழுதிய ஐந்து கடிதங்களும் கிடைத்தன. நீங்கள் இப்படி நினைத்த பொழுதெல்லாம் பணம் அனுப்பு, பணம் அனுப்பு என்று எழுதினால் நான் பணத்துக்கு எங்கே போவேன்? இங்கே என்ன பணம் முளைத்தா தொங்குகிறது? ஆகவே இன்று ரூ. 100 மணியார்டர் அனுப்பியிருக்கிறேன். அதை வைத்துக் கொண்டு எப்படியாவது சமாளியுங்கள். இதற்கு மேல் என்றால் ஒரு சல்லிக் காசுகூட அனுப்ப முடியாது.

உங்கள் பிரியமுள்ள

மணி.

**[பணம் அனுப்பு, பணம் அனுப்பு என்று தொந்தரவு படுத்திய அதே பிள்ளையிடம் பின்னர் பணம் அனுப்பு, பணம் அனுப்பு என்று தகப்பனாரே கேட்க வேண்டியிருக்கிறதே. அது அவர் காலவித்தியாசம்தான்!]**

## பலே திருடன்!

போஸ்ட் மாஸ்டர் (குமாஸ்தாவை நோக்கி):—**ஓய்! இவ்விடம் திருட்டு பயம் அதிகமாயிருப்பதால் பொதுஜன எச்சரிக்கைக்காக "திருடர்கள் ஜாக்கிரதை" என ஒரு போர்ட் மாட்டச் சொன்னேனே, செய்தீரா?**

குமாஸ்தா:—**ஆமாம் ஸ்வாமி, செய்யத்தான் செய்தேன்; ஆனால் அந்தப் பலகையையும் எவனோ அடித்துக் கொண்டு போய் விட்டான்!**





அது மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறதல்லவா!

... ஆம், களைப்பையும் போக்குகிறது!

... அதுமட்டுமா — ஆனந்தத்தையும் அளிக்கிறது!

தினசரி வினோலியா சோப்பை உபயோகித்து சுகத்தை விரும்பும் மனிதர்களைக் கேளுங்கள். அவர்கள் இது மிகவும் ஆச்சர்யமாக சுகமளிக்கும் என்றும், கோடைகாலத்தில் ஓர் சிறந்த வரம் போன்றதென்றும் சொல்லுவார்கள். அதனுடைய வெண்மையான நுரை குளிர்ச்சியையும், மலர்ச்சியையும் கொடுக்கிறது. அதனுடைய பிரத்தியேகமான வாசனை குதூகலத்தை அளிக்கிறது. மிகவும் களைப்படைந்த நரம்புகளுக்கு உற்சாகத்தை ஊட்டுகிறது.




# வினோலியா ஒயிட் ரோஸ் ஸோப்பு

VWR. 18-50 TM

VINOLIA CO., LIMITED, LONDON, ENGLAND






கேசரி குடீரம் லிமிடெட், மதராஸ்

தமிழ் நாடு ஏஜெண்டுகள் :

சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்

மேலக் கோபுர வீதி : மதுரை

---




சோடா, சிரப், சமையல் பண்டங்கள் இவைகளுக்கு ஏற்ற உயர்ந்த பக்குவம் அளிப்பதற்கு எமது எஸன்ஸ், கலர்களுக்கு மிஞ்சியவை வேறெதுவுமே கிடையாது.






BLACK CAT BRAND

**AROMATIC CHEMICALS** AMINJIKARAI. MADRAS.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.